# விடிவிற்காய்...

## பெண்போராளிகளின் எழுத்துருவாக்கங்கள்

தொகுப்பு - ந மாலதி

Contents

# முன்னோக்கு....

*உலகின் பல பாகங்களில், கடந்த 40-50 ஆண்டுகளாக பெண்கள் ஆயுதப்போராட்டங்களில் பங்கேற்று வந்திருக்கிறார்கள். இவ்வாயுதப் போராட்டங்கள் ஆண்களால் ஆரம்பிக்கப்பட்டு சில ஆண்டுகள் போராடிய பின்னரே பெண்கள் அதில் இணைக்கப்பட்டிருக்கிறார்கள். இவ்வமைப்புக்கள் பெண்களின் மேம்பாட்டிற்கு முன்னுரிமை கொடுப்பதாக பேசியிருக்கின்றன. பெண்கள் அமைப்பில் இணைவதை அதிகரிப்பது இதற்கு ஒரு காரணம். இதுவே முதன்மையான காரணம் என்பார்கள் 'புத்திஜீவிகள்'. ஆயுதப் போராட்ட காலத்தில் பெண்கள் அடைந்த முன்னேற்றங்களை ஆயுதப் போராட்டம் முடிந்த பின்னர் பெண்கள் கொஞ்சம் கொஞ்சமாக இழந்து விடுவார்கள் என்றும் இதே 'புத்திஜீவிகள்" சொல்கிறார்கள். விடுதலைப்புலிகளின் ஆயுதப் போராட்டம் ஒரு இனவழிப்பில் முடிவடைந்தது. இதனால் இங்கு பெண்கள் கண்ட முன்னேற்றங்கள் முற்றாக தொலைந்து விட்டன. இவ்வாறே 'புத்திஜீவிகளும் சாதாரண மக்களும் கூட கணக்கிடுவார்கள். இவை உண்மையகவே தொலைந்தது தானா?*

*"விடுதலைப் புலிகள்" என்றவுடன் உலகில் எவருக்குமே பிரமாண்டமாகத் தெரிவது அவர்களின் போரியல் சாதனைகளே. இந்த பிரமாண்டத்துள் ஏனைய முன்னேற்றகரப் பெறுமானங்கள் மூழ்கிப் போய்விடுகின்றன. இவை எந்த "புத்திஜீவின்" பார்வையிலும் இலகுவில் படுவதில்லை அல்லது அவர்கள் அவற்றைப் பார்க்க விரும்புவதுமில்லை. அத்தகைய ஒன்றே பெண்விடுதலை சார்ந்து விடுதலைப்புலி பெண்கள் அடைந்த பெறுமானங்கள். அன்று தமிழீழ நடைமுறை அரசின்கீழ் பெண்கள் அடைந்திருந்த மேம்பட்டதொரு நிலையானது அதற்கு முன்பிருந்ததைவிடவும் இப்போது இருப்பதைவிடவும் கூர்மைபெற்றிருந்தது. இது இன்று பலராலும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. விடுதலைப்புலிகளின் அழிவுக்கு முன்னர் இதை ஏற்றுக்கொள்ள மறுத்த ''புத்திஜீவிகளும்'' கூட இன்று இதை ஏற்றுக்கொள்கிறார்கள். "விடுதலைப் புலிகள்*

இருந்தபோது இங்கு ஒரு பெண்ணால் நடு இரவிலும் அச்சமின்றி எங்கும் செல்லமுடிந்தது" என்று அரசியல்வாதிகளும் வெளிப்படையான பேசுவது விடுதலைப் புலிகளின் அன்றைய தாக்கமான செயற்பாடுகளை நிரூபித்து நிற்கின்றன. அத்தகைய ஒரு மேம்பட்ட நிலையை மீண்டும் தமிழீழப் பெண்கள் அடைய பல தசாப்தங்கள் எடுக்கும். இவையே விடுதலைப் புலிகளின் பெண்கள் சார்ந்த முன்னேற்றத்தை காலம்காலமாக நினைவில் கொள்ளப் போதுமானதாகும்.

விடுதலைப்புலி பெண்போராளிகளின் எழுத்துக்களில் இவை தொடர்பான கருத்துக்கள், காட்சிகள் என்பன காத்திரமாகக் காட்டப்பட்டுள்ளன. பெண்விடுதலை, சமூகநீதி தொடர்பில் அவர்களின் கருத்துகளும் நடைமுறையில் அங்கு பெண்கள் பெற்றிருந்த விளைபயன்களும் அவர்களின் படைப்புகள் எங்கும் பரவி நிற்கின்றன. பொதுவாக போராட்ட வடிவங்கள் பல்வேறு தரப்பினராலும் பதிவுசெய்யப் பட்டாலும், களத்தில் நின்றவர்களால் பகிரப்படும் போது, அதற்கு தனியொரு தகைமை கிடைக்கின்றது. அங்கு அவர்களின் எழுத்துகள் முதல்தர அனுபவத்தின் வெளிப்பாடாகவும் புனைதல்களைப் புறக்கணிப்பவையாகவும் உள்ளன. இந்தவகையிலும் தமிழீழ விடுதலைப் போராட்ட வரலாற்றில் பெண் போராளிகளினதும் ஆண் போராளிகளினதும் எழுத்துக்கள் மிக முக்கியத்துவம் பெறுகின்றன.

வன்னி மண்ணிலே அரியாத்தை என்ற பெண்ணைப்பற்றி ஒரு புகழ்பெற்ற கதையுண்டு. இது சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் இடம்பெற்றதாக சொல்லப்படுகிறது. ஆண்களால் அடக்க முடியாத ஒரு மதம் கொண்ட யானையை அரியாத்தை அடக்கினாள். ஆனால் இது நடந்த சில நாட்களின் பின்னர் அவள் நஞ்சூட்டப்பட்டு இறந்து கிடந்தாள் அரியாத்தையின் சாதனையும் அவள் கொடுத்த விலையும் இன்றும் உயிரூட்டுவதற்காக கையாளப்படுகிறது. ஆனால் இங்கே சேர்க்கப்பட்டிருக்கும் விடுதலைப்புலி பெண்களின் எழுத்துக்கள் அரியாத்தையின் கதையைவிட உயிரூட்டக்கூடியவை.

*இவற்றை எழுதிய போராளிகளில் மிகவும் அறியப்பட்வர்களான பாரதி, கஸ்தூரி, வானதி மற்றும் மலைமகள் மாவீரரனவர்கள். கஸ்தூரியும் வானதியும் 1991இல் ஆனையிறவுப் போரில் மாவீரரானார்கள். பாரதி 1992இல் சிறீலங்கா இராணுவக் கட்டுப்பாட்டுப் பகுதிக்குள் நடந்த மோதலில் மாவீரரானார். விடுதலைப்புலிகள் அமைப்பில் இம்மூவரின் எழுத்துப்பணிகள் சில வருடங்களே நீடித்தன. மலைமகள் கூடிய காலம் தொடர்ந்து எழுதி வந்தவர். இவர் 2009 இறுதிப்போரின் போது வன்னியில் இருந்தார். அம்புலியும், வெற்றிச்செல்வியும் கூட அவர்களின் எழுத்துப்பணிகள் ஊடாக நன்கு அறியப்பட்டவர்கள். இறுதிக்கட்டப்போரின் போதும் வன்னியில் இருந்தார்கள். இங்கு சேர்க்கப்பட்டுள்ள ஏனைய போராளி எழுத்தாளர்களான கலைக்கதிர், சமர்விழி மற்றும் நிலா ஆகியோரைப்பற்றி அதிகம் தெரியவில்லை.*

*தற்காலத்திலும் வருங்காலத்திலும் தமிழ் பெண்களுக்கு உயிர்ப்பு ஊட்டக் கூடியவை என்று கருதப்படும் விடுதலைப்புலி பெண்களின் கவிதைகளும் சிறுகதைகளும் இங்கு சேர்க்கப்பட்டிருக்கின்றன. இங்கு கவிதைகள் முதலிலும் சிறுகதைகள் தொடர்ந்தும் பதிவாகியிருக்கின்றன. இத்தெரிவுகள் குறிப்பாக ஐந்து வகையான கருப்பொருளைகளை பதிவு செய்கின்றன.*

*1) பெண்களின் சாதனைகளும் அதற்காக அவர்கள் கொடுத்த விலையும், 2) அவர்களின் போராட்டங்களில் அவர்கள் சந்தித்த தடைகள், 3) அவர்களின் போராட்டங்களின் ஊடாக அவர்கள் கண்ட சமூக பெறுமானங்கள், 4) அவர்களை அவ்வுயரத்திற்கு எடுத்துச் சென்ற அவர்களின் மனங்களில் எரிந்து கொண்டிருந்த தீ, 5) எல்லாவற்றிக்கும் மேலாக சமூக நீதி விடிவிற்காய் எழும்படி அழைக்கும் அவர்களின் குரல்.*

*கஸ்தூரியின் 'சுதந்திரமே..' கவிதையும் மலைமகளின் 'விலை' சிறுகதையும் விடுதலைப்புலி பெண்களின் சாதனைகளில்*

*அவர்கள் காணும் பெருமையையும் அதற்காக பெண்கள் கொடுத்த விலைமதிப்பற்ற விலையையும் பேசுகின்றன. கஸ்தூரியின் கவிதை தாம் கொடுத்த விலையை பற்றி பேசுவதுடன் அது ஏனைய இடங்களில் மலிவாகக் கிடைக்கிறதே என்றும் ஏங்குகிறது.*

"..சில நாடுகளில்
சில்லறைக்கே
அங்கீகரிக்கப்படும் உனக்கு
நாம்
நோட்டு நோட்டாய்க்
கொடுத்த பின்பும்
வேட்டுக்கள் தானே
கேட்கின்றன."

*மலைமகளின் சிறுகதையின் தலைப்பே 'விலை'. விடுதலைப் போர்களில் பொதுவாக உயிர் தரலே உயர் விலையாகக் கருதப்படுகிறது. ஆனால் இங்கு அதையும் தாண்டிய காட்சிகளை நாம் காணமுடிகிறது.*

"...இடுப்புக்குக் கீழே உடம்பே இல்லாதது போல் மனம் இடையிடையே திடுக்கிட, இரவில் எழும்பி கால்களிரண்டையும் கைகளால் தொட்டுப் பார்த்துக்கொள்வேன். கழுத்துக்குக் கீழே உணர்வில்லாத நிலையிலும் உற்சாகமாகப் பாடல்களைப் பாடிக்கொண்டிருக்கும் தாரணியை மிகமிக ஆச்சரியமாகப் பார்ப்பேன். இப்போது எனக்கும் பழகிவிட்டது..."

*'ஐ.நா சபையே..', 'எனது பேனா', 'நீங்களும்-இரவும்-நாங்களும்' ஆகிய மூன்று கவிதைகளும், 'கதவுகள் திறந்துதான் உள்ளன' சிறுகதையும் பெண்கள் எதிர் கொள்ளும் தடைகளைப்பற்றி பேசுகின்றன.*

*பாரதியின் 'ஐ.நா சபையே..' கவிதையில் விடுதலைப் போராட்டத்திற்கு தடையாக இருந்த ஐ.நாவை பிணம்தின்னி கழுகுகளை தனது செட்டைக்குள் பாதுகாக்கும் தாய்க்கோழிக்கும்*

*உண்மைக்கு முகம் கொடுக்காமல் தலையை மண்ணில் புதைக்கும் தீக்கோழிக்கும் ஒப்பிடுகிறார்.*

“..கோழிச் செட்டைக்குள்
குஞ்சுகள்தான் பாதுகாக்கப்படும்
ஆனால் இங்கே பருந்துகள் தானே
பாதுகாக்கப்படுகின்றன…
…….
உலக சமாதானம் - இந்த
உன்னத கோட்பாட்டிற்குள்
தலையைப் புதைக்கும் தீக்கோழி நீ
முகம் தெரியாவிட்டாலும் - சீ…
முழு உடலும் அம்மணமாய் தெரிகிறது…”

*'எனது பேனா' கவிதையில் வானதி போராட்டங்களை வெற்றுச் சொற்களால் எதிர்ப்போருக்கு சவால் விடுகிறார். புத்தகங்களை மட்டுமே படித்துவிட்டு,சாய்மனைக் கதிரையில் சாய்ந்துகொண்டு விமர்சனம் என விஷமம் செய்யும் "விற்பனர்களின்" சடையைப் பிடித்து உலுக்குகிறது அவரின் கவிவரிகள்.*

“எந்த
கலாநிதியுடனும்
எந்த
வித்துவானுடனும்
எந்த
பண்டிதருடனும்
என் கவிதை சவால் விடும்
ஏனெனில்
எனது பேனாவில்
உணர்வுகள்
உயிருள்ளவை!”

*நிலாவின் 'நீங்களும்-இரவும்-நாங்களும்' கவிதை ஆணாதிக்கத்தை மென்மையாக கண்டிக்கிறது. ஆனால் மலைகளின் 'கதவுகள்*

*திறந்துதான் உள்ளன' சிறுகதை காலம் காலமாகத் தொடரும் ஆணாதிக்க சிந்தனையை கூர்மையாக விளக்குகிறது.*

"..நான் காணுகின்ற மனிதர்கள் என்னைத் தன் அதிகாரத்தால் அடக்க முயல்கின்றனர். அல்லது அன்பு என்னும் போர்வையில் கட்டுப்போட்டு முடக்க முயல்கின்றனர். இரண்டு வழிகளுமே சரிவராத நிலையில் எனக்கு 'அடங்காப்பிடாரி', 'ஒரு மாதிரி', என்று பட்டங்களைச் சூட்டிவிட்டு விலகி நின்று வீண் விமர்சனம் செய்து என்னை மழுங்கடிக்க முயல்கின்றனர்"

*ஆணாதிக்க சமூதாயமொன்றில் வாழ்ந்துகொண்டு ஆண்களை அதிகமாகக் கொண்ட ஒருஅமைப்பில் அங்கம் வகித்துக்கொண்டு ஆணாதிக்கத்தின் குரல்வளையைப் பிடித்து நெரிக்கின்ற தைரியம், அதற்கான சுதந்திரம் அவர்களுக்கு இருந்ததை இங்கு நாம் காணமுடிகிறது.*

*பெண்கள் சமூக மட்டத்தில் கண்ட சுதந்திரமான வெளிகளை இவர்களின் கவிதைகளை விட சிறுகதைகளே சிறப்பாக வெளிக்கொணர்கின்றன. மலைமகளின் கதைகளிலும், அம்புலி, வெற்றிச்செல்வி இருவரின் இரண்டு கதைகளிலும் பெண்களின் பேச்சுக்கள் ஊடாக அவர்களின் சுதந்திரமான வெளி காட்டப்படுகின்றது. மலைமகளும் அம்புலியும் இதை போர்க்களங்களிலேயே காட்டுகிறார்கள்.*

"சத்தம் போடாதையுங்கோ. நிலம் வெடிக்கப் போகுது. வீட்டில் இருந்தா இப்படியெல்லாம் குதியன் குத்தியிருப்பியளே? சத்தம் போடாமல் ஒரு மூலையில் இருந்திருப்பியள்."

இதற்கு அங்கு நின்ற கிலுக்கிட்டான் ஒன்று சட்டெனப் பதிலளித்தது.
"அதுதானே வீட்டில இல்லாமல் இஞ்ச வந்து நிக்கிறம்"

*வன்னியில் போராளிகளுக்கு மட்டுமன்றி பொதுச் சமூகத்திலும் பெண்களுக்கு இவ்வெளி இருந்தது. இந்த சுதந்திர வெளி இன்னும் அங்கு எஞ்சி இருப்பதை வெற்றிச்செல்வி காணுகிறார். சனல் 4 என்ற அவரது சிறுகதை போரின் வடுக்களைப் பற்றிப் பேசுவதாகவிருந்தபோதும் கதையினூடே அந்த சுதந்திர உணர்வு*

வெளிப்பட்டே நிற்கிறது. தமிழ் சமூகத்தில் வேறு எங்கே இரு தோழிகளில் ஒருவர் மற்றவரை விளையாட்டுகேனும் அலாக்காகத் தூக்கும் பலமும் சுதந்திரமும் கொண்டிருப்பார்கள். தமிழ்ப்பெண்களிடையே துளிர்விட்டிருந்த இந்த சுதந்திரமான உயிர்ப்பை கண்டு சிங்கள அரசு அஞ்சுவதும் அதை அழிப்பதற்காக வன்முறைகளை இன்றும் கையாள்வதும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

அம்புலியின் 'உள்ளே எரியும் தீ' போராளிகளின் மனதில் உள்ள தீயைபற்றி வாசகர்களுக்கு அறிவூட்ட விளைகிறது. அத்துடன் போராட்ட வாழ்வில் போராளிகளிடையே இழையோடும் காதல் உணர்வையும் இங்கு காணமுடிகிறது. விடுதலைப் புலிகள் இயக்கத்தில் காதல் ஒன்றும் கண்டனத்திற்கு உரியகருப்பொருளல்ல.

அதேபோல கஸ்தூரியின் 'இடம்மாறியுள்ள துப்பாக்கிளால்...' ஒரு இளம் தாயின் உள்ளத்திலும் இத்தீ எரிந்து கொண்டிருந்ததை சொல்கிறது. அன்று இந்தியப் படைகளும் அவர்களுக்குத் துணைபோன குழுக்களும் ஈழத்தில் புரிந்த கொடூரங்களின் குறியீடாகவும் இதனை நாம் பார்க்கமுடியும்.

இறுதியாக, இங்கு சேர்க்கப்பட்டிருக்கும் அதிகமான கவிதைகள் போராட்டத்திற்கான எழுச்சியை வேண்டுகிறது. போராட்டம் என்பது ஆயுதப்போராட்டத்தையோ, தனித்தமிழீழப் போராட்டத்தையயோ மட்டும் குறிப்பதாக இக்கவிதைகள் சொல்லவில்லை. அவை அனைத்து அடக்குமுறைகளுக்கும் எதிரானவையே என்பதை அவை ஆணித்தரமாகக் கூறி நிற்கின்றன.

இத்தொகுப்பின் இறுதியில் ஈழத்தமிழ்பெண்கள் பொதுவெளியில் செயற்பட வந்த வரலாற்றுச் சுருக்கம், இதுபற்றிய ஒரு விளக்கத்துடன் கூடிய புள்ளிவிபரம், ஆயுதப்போராட்டத்துடன் தொடர்புள்ள பெண்களின்

வெளியிடப்பட்ட ஆக்கங்களின் பட்டியல் ஆகியனவும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

## *ஐ.நா சபையே ...*

***-பாரதி*** *("காதோடு சொல்லிவிடு", வெளியீட்டுப்பிரிவு - விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு, 1995)*

*ஐ.நா சபையின் அடுக்குமாடி*
*உறுதியாக உயர்ந்து நிற்கிறது*
*மனித எலும்புகளின் மகத்தான உறுதியினால்*
*வானைப் பிடிக்க வளர்ந்து வருகிறது*
*பட்டொளி வீசி பறக்கின்ற கொடியினை*
*எட்டிப் பாருங்கள் - தொகை வகையாய்*
*சேர்ந்த உயிர்கள் ஆடித்துடிக்கின்றன.*

*மேடைமீது ஏறி இருந்து*
*ஏற்றம் பற்றி பேச்சு நடத்தும்*
*தேசத்துரைமாரே குனிந்து பாருங்கள்*
*பூவாய் இருக்கும் கம்பளம் கீழே*
*புழுவாய் நெளியும் மனித உடல்கள்*
*அவை உங்கள் குருட்டுக் கண்களை*
*வெருட்டி திறக்கும்.*

*கோழிச் செட்டைக்குள்*
*குஞ்சுகள்தான் பாதுகாக்கப்படும்*
*ஆனால் இங்கே பருந்துகள் தானே*
*பாதுகாக்கப்படுகின்றன.*

*ஐ.நா சபையே உன் ஏமாளித்தனத்தை*
*என்னென்று சொல்ல - கோடி கோடியாய்*
*ஏழை உயிர்களை ஏப்பம் விட்ட*
*வல்லூறுகளின் வண்டி*
*ஊதிப்பெருத்து உள்ளுக்குள் அடங்காது*
*செட்டைக்குள்ளே சின்னதாய் தெரியுது*

*'உலக சமாதானம் - இந்த*

*உன்னத கோட்பாட்டிற்குள்*
*தலையைப் புதைக்கும் தீக்கோழி நீ*
*முகம் தெரியாவிட்டாலும் - சீ...*
*முழு உடலும் அம்மணமாய் தெரிகிறது.*

*உரிமைப்போர் எல்லாம் உன்னால்*
*உறுதிப்படுத்தப்பட வேண்டுமாம்*
*உலகம் சொல்கிறது.*
*சுதந்திரத்தின் சுகம் பற்றி சொல்வதற்கு*
*சொந்தமாய் உனக்கேதும் அனுபவம் உண்டா?*
*இல்லையே*

*எங்கள் தேசம் எங்கள் மக்கள்*
*எமதே உரிமை எனவே நாம்*
*சுதந்திரப் பிரகடனம்*
*செய்து முடித்திடுவோம்.*

*நாளை தியாகமும் திறமையும்*
*திடமாய் எமை வளர்க்கும் - அப்போது*
*சமநிலையை சரிப்படுத்த எம்மை நீ*
*சந்திக்க வேண்டிவரும்.*
*அக்கணத்தில் சுதந்திரம் பற்றிய*
*சொந்த அனுபவத்தை*
*நாங்கள் சொல்லித் தருவோம்.*

## *எனது பேனா....!*

***-வானதி*** *("வானதியின் கவிதைகள்", வி.பு வெளியீட்டுப் பிரிவு, 1992)*

*எனது*
*பேனா கூரானது*
*எனது*
*கைகளில் உள்ள*
*துப்பாக்கியைப் போல*

*ஆனால்*
*துப்பாக்கி*
*சன்னத்தை மட்டுமே துப்பும்*
*என் பேனாவோ*
*சகலதையுமே கக்கும்!*

*எந்தப் போட்டிகளிலும்*
*கலந்து கொள்ள – எனது*
*கவிதைக்கு அனுமதியில்லை*
*ஆனால்*
*எமது உணர்வுகளை*
*அவமரியாதை செய்து*
*அனுமதி வழங்கத்*
*தவறும் இடங்களில்*
*எனது பேனா*
*உத்தரவின்றி*
*உட்பிரவேசிக்கும்!*

*பராட்டுக்களோ*
*அன்றி பரிசுகளோ*
*என் கவிதையை*
*பரவசப்படுத்துவதில்லை*
*ஏனெனில்!*

*மிக உயர்ந்த பரிசும்,*
*மிக... மிக.... உயர்ந்த*
*பாராட்டும் அன்று*
*என் கவிதைக்கு*
*கிடைத்ததால்தான்*
*இன்று – என் கவிதை*
*பரிசுத்தமாய் இருக்கிறது.*

*எனது*
*பேனா கூரானது!*
*எனது*
*கைகளில் உள்ள*
*துப்பாக்கியைப் போல!!*

*எந்த*
*கலாநிதியுடனும்*
*எந்த*
*வித்துவானுடனும்*
*எந்த*
*பண்டிதருடனும்*
*என் கவிதை சவால் விடும்*
*ஏனெனில்*
*எனது பேனாவில்*
*உணர்வுகள்*
*உயிருள்ளவை!*

*எமது*
*உணர்வுகளை*
*கொச்சைப்படுத்தும்*
*சில பேனாக்களுக்கு*
*ஓர் வேண்டுகோள்!*
*முகவரி தருங்கள்*
*உங்கள் முகத்திரையை*
*என் பேனா கிழிக்கும்!*

எனது
பேனா கூரானது
எனது கைகளிலுள்ள
துப்பாக்கியைப் போல!
எனது துப்பாக்கி
எதிரியை மட்டுமே
குறிபார்க்கும்.
எனது பேனாவோ
எல்லாவற்றையும்
பதம் பார்க்கும்

எனது
பேனாவின்
நினைவுகளின்
இறந்தகாலம்
நிகழ்வுகளின் நிகழ்காலம்,

எனது
பேனாவின்
நினைவுகளின்
நிகழ்காலம்
நிகழ்வுகளின் எதிர்காலம்

புரியவில்லையா
என் கவிதைகளை
நீ புரியவில்லையா!

இது
எனக்குக் கிடைத்த
வெற்றியல்ல!
எனது கவிதைக்கு கிடைத்த
வெற்றியுமில்லை!
எனது

பேனாவின் வெற்றிகள்
எனது கைகள்
நாளை ஓயலாம்
அன்றி ..... ஒடியலாம்
ஆனால்
எனது பேனாவோ
ஓயப்போவதில்லை
எமது துப்பாக்கியைப் போல!!!
மன்னார் அனுபவத்தின் பின்
எனது பேனா கூரானது
கைகளிலுள்ள
துப்பாக்கியையும் விட
எனது பேனா கூரானது.

# நீங்களும் இரவும் நாங்களும்

*-**நிலா** ("சுதந்திரப் பறவைகள்", வி.பு மகளிர் பிரிவு, ஐப்பசி-கார்த்திகை 2002)*

*ஓடிக்கொண்டிருக்கும் நேரத்தை பிடிக்க
விரைந்து கொண்டிருக்கும் எங்களை மறித்து
உங்களின் கரங்கள் நீளும்
நிற்போம்
'அண்ணா நானும் வரட்டா?' என்பீர்கள்.
வாயில் வார்த்தை எதுவுமே வராது போவோம்.
ஏதேனும் சிந்தனையில் மூழ்கி நாங்கள்
ஒரு கணம் நிதானம் இழந்து போனால்
'டிம்' இல்லையோடா? என்று திட்டுவீர்கள்.
சிரிப்பும் கவலையும் சேர்ந்தே வரும்.*

*பாதுகாப்பாக பீரங்கிகளை நிலைப்படுத்தி
எண்ணியெண்ணி எறிகணைகள் செலுத்திய
காலங்கள்போக
எதிரிகள் ஓடும் வேகத்திற்கேற்ப
எறிகணை செலுத்திகளை நகர்த்தும்
வாகனங்களை செலுத்தும் வல்லமை பெற்ற
சகோதரிகளுடைய சகோதரர்களே,
இரவிலே வாகனங்கள் செலுத்தும் அனைவரும்
ஆண்களாகத்தான் இருப்பார்கள் என்று
எப்படி உறுதியாகத் தீர்மானிக்கின்றீர்கள்?
உங்களின் எழுதாத சட்டங்களைத்
தூக்கி எறிந்து விட்டு
தயவு செய்து கவனியுங்கள்.*

*நாளைக்கு உங்கள் அக்கா
Hiace செலுத்திச் செல்லக்கூடும்.
உங்களது கடைசித்தங்கை
Passion இல் பறத்தல் நேரும்.*

கப்பற்தொகுதிக் கட்டளைத் தளபதியாய்
மருமகள் பிறத்தல் ஆகும்.
தமிழீழத்தில் ஓர் நல்ல விமானியாய்
பெறாமகள் இருத்தல் நிகழும்.
சட்டங்கள் பெற்றாலும் சுதந்திர தமிழீழத்தில்
வேலையில்லாச் சிக்கலிற்குள் சிக்காது உங்களது
புதல்வியால் கூட வீதிப் புனரமைப்பில் ஈடுபடும்
கனரகங்களை கச்சிதமாய் செலுத்த முடியும்.
உருளச் சிரமப்படும் உலகத்தை ஒற்றைக் கையால்
உருட்டப்போகும் உங்களது
பேத்தியின் பெருமை காணும்
பேறு உங்களுக்கு இருத்தல் நன்று.

எமதருமை உறவுகளே
இனியேனும் வாகனங்களை மறிக்கும் போது
பொதுப்பெயரில் விளித்துதவி கேளுங்கள்.
உறவுப் பெண்களாயிருந்தால் உந்துருளிகளிலும்
ஏனையவர்களானால் ஏனைய வாகனங்களிலும்
இடமிருந்தால் நிச்சயம் உதவுவார்கள்.

நேற்றும் இன்றும் நாளையும்
ஒருபோதும் ஒன்றாக இருக்க முடியாது
என்பதுடன்
இது
சூரியப் புதல்விகள் உலவும் தேசம்.

## ***சுதந்திரமே....!***

***-கஸ்தூரி*** *("கஸ்தூரியின் ஆக்கங்கள்", வெளியீட்டுப்பிரிவு - விடுதலைப்புலிகள், 1995)*

*சுதந்திரமே உன்னோடு*
*சொந்தம் கொண்டாடப்*
*புறப்பட்டதால்*
*சாவு இங்கே*
*சாதாரண விலைக்கு*
*வந்து விட்டது.*
*உன் விலையோ - இன்னும்*
*உயர்ந்து கொண்டுதானே*
*செல்கிறது.*
*சில நாடுகளில்*
*சில்லறைக்கே*
*அங்கீகரிக்கப்படும் உனக்கு*
*நாம்*
*நோட்டு நோட்டாய்க்*
*கொடுத்த பின்பும்*
*வேட்டுக்கள் தானே*
*கேட்கின்றன.*

*ஆனாலும்*
*வேட்டுகளுக்கோர்*
*விண்ணப்பம் -*
*விடுதலையை உங்களால்*
*விழுங்கிவிட முடியாது.*
*சுதந்திரத்தை உங்களால்*
*சுட்டுப் பொசுக்க முடியாது.*
*ஆகவே*
*தியாகிகளிடமிருந்து*
*திரும்பிச் சென்று*
*சமூக விரோதிகளினுடலில்*
*சரணடைந்து கொள்ளுங்கள்.*

## *விடிவிற்காய் எழுவோம்*

***-பாரதி*** *("காதோடு சொல்லிவிடு", வெளியீட்டுப்பிரிவு - விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு, 1995)*

*இரவொன்று கரைந்து போக*
*இன்னும் சில நேரம் மீதமிருக்கும்.*
*புதுநாளின் பிறப்பிற்காய்*
*புள்ளினங்கள் பாட்டுப்பாடும்*
*ஒரு அதிகாலைப் பொழுது அது.*
*பனிமழையில் நனைந்தெழுந்த*
*பனைமரங்கள் சிலிர்த்து நிற்கும்.*
*பற்றைகளும் கூட ஒரு*
*புத்துணர்ச்சி பெற்றிருக்கும்.*
*பட்டாசு வெடி போல*
*கிட்டவாய் சத்தம் எழும்.*
*முன்னுக்கு பின்னுக்கு*
*முதுகிற்கு மேலாக – எம்*
*உயிரைத் தொட்டணைக்க*
*உலங்கு வானூர்திக் குண்டு வெடிக்கும்.*

*இன்றுவரை அருகிருந்து*
*அம்மாவின் கதை சொன்ன*
*அன்பு நண்பியின்*
*ஆயுதம் அணைத்திருந்த*
*கரம் விறைத்து விழும்.*
*செங்குருதி இம்மண்ணில்*
*புதிதாய் படம் வரையும்.*

*அம்மண்ணின்*
*இளம் புதல்வி ஒருத்தியின்*
*உயிர் இழந்த உடலொன்று*
*எம்முடன் இருக்கும்.*
*கனல் கக்கும் எம்விழிகள்*

கலங்கி இருக்க – அவள்
கைப்பிடித்த துப்பாக்கி
கரம் மாறும்
சடசடக்கும்.
எம் வேகம் அதிகரிக்க
பட்டாசு வெடிச்சத்தம்
தூரக் கேட்கும்.

பெற்றெடுத்த புதல்வி
பெருமகளாய் போனதனால்
பூமித்தாயின் சோகநிலையாய்
மௌனம் பிறப்பெடுக்கும்.
சிதைந்து போன பனைமரமும்
சிறகொடிந்த குருவிகளும்
பற்றி எரிந்த பற்றைகளும்
எம் மண்ணின் விடுதலைக்காய்
ஏந்திய வடுக்களால்
இன்னும் நிமிர்ந்து நிற்கும்.

குச்சொழுங்கை குறுணிகளும்
குவிந்திருந்து குண்டுகளாய் மாற
தீர்மானம் எடுக்கும்.
குருதிச் சேற்றில்
பதியும் என் கால்கள்
குறிக்கோளை நோக்கி
விரைந்தோடும்.
நினைவுகளைத் தாங்கும்
என் விழிகள்
அடுத்த விடியாலுக்காய் காத்திருக்கும்.

# காதோடு சொல்லிவிடு

***-பாரதி*** *(”காதோடு சொல்லிவிடு” வெளியீட்டுப்பிரிவு - விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு, 1995)*

*பூமிப் பந்தின்*
*புவியீர்ப்புக்கு அப்பால்*
*பிரபஞ்ச வெளியையும்*
*பிய்த்துச் சென்றது*
*மீண்டும் ஒரு*
*வெடி அதிர்வு*

*ஒலி அலையை*
*முந்திச் சென்ற*
*ஒளி அலைகள்*
*வெளிச்சத்தைப் பற்றி*
*விண் மீன்களுக்கு*
*விளங்கப்படுத்தின.*

*எம்*
*அன்னை பூமியில்*
*அழிவுகளை மட்டுமே*
*பிரசவிக்கத் தெரிந்ததுவாய்*
*தரித்து நின்ற*
*தாய்க் கப்பலை*
*தகர்த்த தெறிந்த*
*இலட்சிய வீரரின்*
*இறுதி மூச்சின்*
*வெப்பத்து வீச்சால்*
*இந்து சமுத்திரம்*
*இன்னுமொரு தரம்*
*பொங்கித் தணிந்தது.*

*ஆம்!*

தேசத்தின் புதல்வர்களே
தேடிப் பாருங்கள்
இந்த சுதந்திர சிற்பிகளின்
சுவடுகள் இங்கேதான்.

எங்கே?
கர்வப்பட்டுக் கொண்டிருக்கும்
இந்தப் பூவுலகின்
கண்களெல்லாம்
கண்டு பிடிக்கட்டும்
அவர்களது
கடுகளது உடற்கூறை
பெருமையோடு உரிமை கொள்வோம்
இவர் தாம்
மானுடத்தின் தோழரென்று.

உலகத்து
மொழி பெயர்பாளரை
உடனே அழையுங்கள்
முடிந்தால்
எங்கள் தோழரின்
உள்ளத்து உணர்வுகளை
உரத்து
மொழி பெயர்க்கட்டும்.

ஆராய்ச்சியாளருக்கெல்லாம்
ஓர் அவசர வேண்டுகோள்.
உங்கள் ஆராய்ச்சி கூடங்களில்
இந்த அர்ப்பணிப்புகளை
ஆராயுங்கள்.
ஆர்ப்பரிக்கும் கடலலையே
அடிபணிந்து விட்டோம்.
இவர்களின்
இலட்சிய தாகத்தை

நீயே கூறு.

தானைத் தலைவனின்
பாசப் பகிர்வின் பின்
பாதி இரவும்
மெதுவாய் கழிய
கரிய இருளில்
காற்றோடு காற்றாய்
கரைந்து போனதை
கடைசியாய்க் கண்டது
நீ தானே?

வெடிமருந்துப் படகோடு
இவர்களுக்களித்த
இறுதித் தாலாட்டும்,
ஈரமுத்தமும்
உன்னுடையதுதானே?

அன்னையை விட
அவர்களை
அதிகமாய் அணைத்தது
நீ தானே?

அதனால் தான்
உன்னிடம்
உரிமையோடு கேட்கிறோம்
கடலலையே
நீ
கரையைத் தொடும் போது
எம்மக்களுக்கு
காதோடு சொல்லிவிடு
விடுதலையை வென்றெடுங்கள்
அப்போது
அவர்கள் வருவார்கள் என்று.

# *காத்திருப்பு*

***-சமர்விழி*** *(”வெளிச்சம்” பவழ இதழ், வி.பு கலை பண்பாட்டுக் கழகம், 2001)*

*நள்ளிரவில்
வல்லூறுகளின் சுவடுகள்
கிராமத்தை வளைத்தன.
ஒருகணம் கண்ணயர
நரபலி எடுப்போன்
மனிதர்களை காயப்படுத்தினான்.
என் விழிகளும் குருடாகின.
ஆன்மாவை இறுகப்பொத்தி
சில நிமிடங்கள்
என்னில் மௌனப்போர்.
பயங்கரவாதத்தின் சாயம்
எனக்கும் பூசப்பட்டதல்லவா?
என்னில் ஓடுவது
கலப்பற்ற தமிழீழ இரத்தமல்லவா?
மறுநாள்
காணாமல் போன
எனது பெயரும்
விலங்கிடப்பட்ட எனது கையும்
விடுதலைக்காய் காத்திருக்கும்
பிரிந்த உறவுகளுடன் இணைந்து.*

## ***கோலம்***

***-கோ. சி. கலைக்கதிர்*** *("வெளிச்சம்", பவழ இதழ், வி.பு கலை பண்பாட்டுக் கழகம், 2001)*

*கோலமிடுவது*
*அம்மா வழியாய்*
*வந்த பழக்கம்.*
*தனித்துவமும் கூட.*
*கோலமிடும் போது*
*இவள் ரசித்து*
*மகிழ்ந்ததுண்டு.*
*வெட்கம் இவளை*
*ஆட்படுத்திய பொழுதில்*
*சிறுகால் பெருவிரல்*
*கோலமிட்டதுண்டு.*
*இவள் கோலமிடும்*
*காலம் வந்தபோது*
*இவள்*
*கோலமிடவில்லை*
*முற்றத்தில்*
*புற்றிருந்தது.*
*மரநிழலில் வாடிய*
*இவள் கரங்கள்*
*மண்வெட்டி*
*தூக்கி நடந்ததால்,*
*இப்போ*
*புற்றில்லை*
*ஆனால்*
*முற்றத்தில் அவள்*
*உடலில்*
*ஓடிய குருதி*
*கோலமிட்டிருந்தது.*
*என்றும்*
*அழியாதபடி.*

## *எழுதாத கவிதை...*

***-வானதி*** *("வானதியின் கவிதைகள்", வி.பு வெளியீட்டுப் பிரிவு, 1992) - களத்தில் வீரமரணம் அடைவதற்கு முன் இவர் எழுதிய இறுதிக் கவிதை.*

*எழுதுங்களேன்*
*நான்*
*எழுதாது செல்லும்*
*என் கவிதையை*
*எழுதுங்களேன்!*

*ஏராளம்.......*
*ஏராளம்.... எண்ணங்களை*
*எழுத*
*எழுந்துவர முடியவில்லை,*
*என் துப்பாக்கி*
*எழுந்து நிற்பதால்.*
*எழுந்துவர என்னால் முடியவில்லை!*
*எனவே*
*எழுதாத என் கவிதையை*
*எழுதுங்களேன்!*

*சீறும்*
*துப்பாக்கியின் பின்னால்*
*என் உடல்*
*சின்னா பின்னப்பட்டு போகலாம்*
*ஆனால்*
*என் உணர்வுகள் சிதையாது*
*உங்களை சிந்திக்க வைக்கும்.*

*அப்போது*
*எழுதாத என் கவிதையை*
*எழுதுங்களேன்!*

*மீட்கப்பட்ட – எம் மண்ணில்*
*எங்கள்*
*கல்லறைகள்*
*கட்டப்பட்டால்*
*அவை*
*உங்கள்*
*கண்ணீர் அஞ்சலிக்காகவோ*
*அன்றேல் மலர் வளைய*
*மரியாதைக்காகவோ அல்ல!*
*எம் மண்ணின்*
*மறுவாழ்விற்கு*
*உங்கள் மன உறுதி*
*மகுடம் சூட்ட வேண்டும்*
*என்பதற்காகவே.*

*எனவே*
*எழுதாத என் கவிதையை*
*எழுதுங்களேன்!*

*அர்த்தமுள்ள*
*என் மரணத்தின் பின்*
*அங்கீகரிக்கப்பட்ட*
*தமிழீழத்தில்*
*நிச்சயம் நீங்கள்*
*உலாவருவீர்கள்!*

*அப்போ*
*எழுதாத*
*என் கவிதை*
*உங்கள் முன்*
*எழுந்து நிற்கும்!*

*என்னை*

தெரிந்தவர்கள்
புரிந்தவர்கள்
அரவணைத்தவர்கள்
அன்பு காட்டியவர்கள்
அத்தனை பேரும்
எழுதாது
எழுந்து நிற்கும்
கவிதைக்குள்
பாருங்கள்!

அங்கே
நான் மட்டுமல்ல
என்னுடன்
அத்தனை
மாவீரர்களும்
சந்தோசமாய்
உங்களைப் பார்த்து
புன்னகை பூப்போம்!

# அழகிய மனங்கள் வேண்டும்

*-**அம்புலி** ("எரிமலை", வி.பு அனைத்துலக பிரிவு, ஜூன் 2004)*

*மானுடர்களை விட*
*மனங்களே எமக்கு வேண்டும்.*
*இந்த மனங்களின் பலத்தை நாமறிவோம்.*
*பயிற்சியாலும், படைபலத்தாலும்*
*முடியாததை - இந்த*
*மனங்கள் வென்றிருந்தன.*

*எம் காலத்தில்,*
*காலுடைந்தும் கையிழந்தும்*
*உணர்வுகளற்று முடங்குபவர் என*
*எண்ணிய பலரும்*
*மனங்களால் எழுந்து*
*சிறகு விரித்த*
*காட்சிகள் இன்னமும்*
*எம்மிடையே வாழ்கின்றன.*
*ஆதலால்,*
*மனங்களே வேண்டும் எங்களுக்கு.*

*பொய்யணியாத*
*வேடம் புனையாத*
*வஞ்சனை நெருங்காத*
*பொறாமைத் தீ உட்புகாத*
*போர்களம் போல் பொருமாத*
*மானுட வாழ்வின் ஆதாரமாய்*
*மானுட பலத்தின் ஆத்மாவாய்*
*உலகத்தை இயக்கும் மந்திரமாய்*
*உடலைச் செலுத்தும் யந்திரமாய்*
*மனங்களே வேண்டும் எங்களுக்கு.*

*குறோட்டன் செழித்த பூங்காவில்*

அருவி சலசலக்கும் அடவியிலும்
வர்ணம் பூசிய வானத்திலும்
ஒப்பனை செதுக்கிய முகங்களிலும் விட
அழகானவை மனங்கள் - இந்த
அழகிய மனங்கள் எமக்கு வேண்டும்.

நேசத்தை வளர்ப்பதற்கு
தேசத்தை செதுக்குவதற்கு
வேடத்தை விரட்டிக் கலைப்பதற்கு
பேதங்களை குழிதோண்டிப் புதைப்பதற்கு
அழகிய மனங்களே வாருங்கள்.
குண்டு துழைத்து
இடிந்து கொட்டுண்டு
பற்றை படர்ந்து காடாகி
சுட்டெரிக்கப்பட்டு வெளியாகி
மொட்டை மரங்களால்
நிரம்பியுள்ள இந்தத்
தாய் நிலத்தை
அன்பினால் அலங்கரிக்க வாருங்கள்.
அழகிய மனங்களே வேண்டும் எமக்கு.

# கதவுகள் திறந்துதான் உள்ளன

*–**மலைமகள்** (”சரிநிகர்”, சரிநிகர், அக்டோபர் 14-27, 1999, - மறுபதிப்பு “மலைமகள் கதைகள்” சிறுகதை தொகுப்பு, கப்டன் வானதி வெளியீட்டகம் – வி.பு மகளிரிர் பிரிவு, 2004)*

தலைமுறை தலைமுறையாகவே என் புத்திக்கூர்மையும், ஆளுமையும் கடத்தப்படுவதாக என்னுள் உணர்கிறேன். எப்போதுமே எதையுமே சாதிக்கக்கூடிய ஆற்றலுடன்தான் இருந்துவருகிறேன். எந்தப் பெரிய நிர்வாகத்தையும் சிக்கலின்றி இயக்கக்கூடிய ஆளுமை பண்டுதொட்டு என்னிடம் இருந்து வருகிறது. ஆனால், என் புத்திசாலித்தனத்தை சந்திக்காமல், தம் அதிகாரத்தால் என்னை அடக்க முனையும் மனிதர்களே இந்த உலகில் பெரும் எண்ணிக்கையில் என் கண் முன்னே உலவுகிறார்கள். எனக்கு இருக்கும் ஒரே ஒரு மனவருத்தம் என்னவென்றால், என்னுடைய புத்திசாலித்தனத்தை, ஆளுமையை மதித்து கௌரவிக்கக்கூடிய, உணர்வுகளைப் புரிந்துகொள்ளக் கூடிய மனிதர்களைப் பெரும்பாலும் காணமுடிவதில்லை என்பதுதான். தாய்வழிச் சமுதாயம் அழிந்த நாள் முதலாய் நான் அவர்களை, அந்த நல்ல மனிதர்களை தேடியலைகிறேன். இன்னும் தான் அவர்களைச் சந்திக்கவில்லை.

நான் காணுகின்ற மனிதர்கள் என்னைத் தன் அதிகதரத்தால் அடக்க முயல்கின்றனர். அல்லது அன்பு என்னும் போர்வையில் கட்டுப்போட்டு முடக்க முயல்கின்றனர். இரண்டு வழிகளுமே சரிவராத நிலையில் எனக்கு 'அடங்காப்பிடாரி', 'ஒரு மாதிரி', என்று பட்டங்களைச் சூட்டிவிட்டு விலகி நின்று வீண் விமர்சனம் செய்து என்னை மழுங்கடிக்க முயல்கின்றனர். நான் தம்மை விட ஒரு படியேனும் குறைந்தவளாக இருக்க மாட்டேனா என்ற ஆதங்கம் அவர்களிடம் நீண்ட காலமாகவே இருந்து வருகிறது. நாலுபேருக்கு முன்னால் என்னை அறிவுபூர்வமானவள் என்பதை அவர்களால் ஏற்றுக்கொள்ளவே முடிவதில்லை. என்னைவிட தாங்களே அறிவுபூர்வமானவர்கள், ஆளுமையானவர்கள் என்று நாலுபேரிடம் காட்டிக்கொள்ள முயலும்போது, நான் ஒன்றும்

*தெரியாதவள் போல் இருந்துவிட்டால் அதில்தான் அவர்களுக்கு எத்துணை மனநிறைவு?! தம்மைவிட பெண் மேலானவள், அறிவு கொண்டவள் என்பது எங்கேனும் வெளிப்பட்டுவிட்டால், அவர்களுக்கு உண்டாகும் கொதிப்புத்தான் எத்துணை? அப்படியான நேரங்களில் அவர்களுக்கு முடியுமானால் என்னைக் கொன்றே விடுவார்கள். இவர்களுடன் நான் எப்படி கைகுலுக்க?*

*இப்படித்தான் ஒருமுறை பாஞ்சாலபுரத்தில் ஜனகனின் மகாசபையில் பிரம்மவாதியான யக்ஞவல்கியனுடன் பிரம்மம்பற்றிக் கருத்தாடல் செய்யச் சென்றிருந்தேன். யக்ஞவல்கியனால் என்னைக் கருத்தாடலில் வெல்ல முடியவில்லை. பிரம்மம்பற்றிய என் கேள்வியினால் திணறிப்போன யக்ஞவல்கியன், 'நிறுத்து கார்க்கி, இதற்கு மேல் கேள்வி கேட்டால் உன் தலை அறுந்து விழும்' என்று அந்த மகாசபையில் கூடியிருந்த அத்துணை அறிஞர்கள் முன்னிலையில் நாகரிகமேயில்லாமல் கத்திக்கூச்சலிட்டுத்தான் அந்தக் கருத்தாடலை நிறுத்த முடிந்ததே தவிர, என் அறிவோடு தன் அறிவால் மோதியல்ல.*

*பின்னொரு நாளில் இன்னொரு சம்பவம் நடந்தது. சோழ மண்டலத்தில் கம்பன் என்னைத் தன் கவியால் மட்டம் தட்ட முயன்று என்னிடம் மூக்குடைபட்டான். எப்படியாவது என்னை 'எடி' போட்டு மட்டம்தட்ட விரும்பிய கம்பன் 'காலடி நாலிலைப் பந்தலடி' என்று நொடி போட்டான். ஒரு தண்டிலே நான்கே இலைகள் மட்டும் கொண்டிருக்கும் ஆரை என்ற கீரையைப் பற்றியதே நொடி. என்னை 'எடி' போடவே கம்பன் நொடி போட்டான். விட்டேனா நான்?*

*'எட்டேகால் லட்சணமே, எமனேறும் பரியே, மட்டில் பெரியம்மை வாகனமே, முட்டமேல் கூரையில்லா வீடே, குலராமன் தூதுவனே ஆரையடா சொன்னாய் அடா'*

*(அவலட்சணமே, எருமைமாடே, கழுதையே, குட்டிச்சுவரே, குரங்கே நீ கேட்டது ஆரை என்ற கீரையை அடா) என்று பதில்*

*கொடுத்து மடக்கினேன். கவிச்சக்கரவர்த்தியே ஆனாலும் ஒரு பெண்ணை மட்டம் தட்டித்தான் தன் புலமையை காட்ட நினைத்த கம்பனை வேறு எவ்வாறு நான் அணுகியிருக்க முடியும்?*

*வேறொரு நாளில் சால்வனும் என் உணர்வுகளை கொச்சைப்படுத்தி அவமானப்படுத்தியதை இன்னும் எத்தனையோ தலைமுறை கடந்தாலும் மறக்க முடியுமா என்னால்...?*

*சாளுவ மன்னம் சால்வனுடன் மனதால் ஒன்றியிருந்த என்னை சுயம்வர நாளன்று சுயம்வர மண்டபத்திலிருந்து என் சகோதரிகள் இருவருடன் சேர்த்து தன் தம்பி திருதராட்டினனுக்கு மணம் முடித்துக் கொடுப்பதற்காக தூக்கிச் சென்றான் பீஷ்மன். அத்தினாபுரத்திலிருந்த அவனது அரண்மனைக்கு கொண்டு சென்ற பின் நான் என் மனதில் இருந்ததை பீஷ்மனிடம் தெரிவித்தேன். அவன் என்னை சால்வனிடம் அனுப்பினான். சுயம்வர மண்டபத்துக்கு வந்திருந்து ஏமாற்றத்துடன் நாடு திரும்பியிருந்த சால்வனோ.*

*'பீஷ்மனால் தூக்கிச் செல்லப்பட்ட பெண்ணை என்னால் மணம் செய்ய முடியாது. நீ பீஷ்மனிடம் போ அம்பை' எனத் திருப்பியனுப்பிவிட்டான். மீண்டும் பீஷ்மனிடம் வந்து அவன் தம்பி திருதராட்டினனுக்கு என்னை மணம் செய்து வைக்குமாறு கேட்க, 'இன்னொருவரை மனதால் நினைத்த உன்னை என் தம்பிக்கு மணம் செய்து கொடுக்க முயாது. நீ சால்வனிடம் போ' என பீஷ்மன் திருப்பியனுப்ப, மீண்டும் சால்வனால் மறுக்கப்பட்டு பீஷ்மனிடம் திரும்பி வந்து 'உங்களால்தான் இந்த நிலைமை வந்தது. நீங்களே என்னை மணம் செய்யுங்கள் என்று கேட்க அவன் மறுத்துவிட்டான். நான் என்ன குப்பையா இப்படிச் சால்வனாலும் பீஷ்மனாலும் மாறி மாறித் தூக்கி வீசி எறியப்பட?*

*நான் ஒரு பெண். உடலும் உயிரும் உணர்வும் கொண்ட மனித உயிர். என் இளமை உணர்வுகளைத் தூண்டியவன் சால்வன்.*

கேட்டுக்கேள்வி இல்லாமல் தூக்கிச் சென்றவன் பீஷ்மன். தன்னுடன் மனதால் ஒன்றிய என்னை பீஷ்மன் தூக்கிச் சென்றான் என்று காரணம் சொல்லி மறுத்தான் சால்வன். தன்னால் தூக்கிச் செல்லப்பட்ட என்னை வேறொருவனை விரும்பினேன் என்று காரணம் சொல்லி மறுத்தான் பீஷ்மன். அவன் பிரம்மச்சாரிய விரதம் கடைப்பிடித்தது வேறு விடயம். ஒரு பிரம்மச்சாரி ஏன் என் வாழ்வில் தலையிட வேண்டும்?

இந்த இருவரில் ஒருவராவது எனக்கு மனம், விருப்பு, வெறுப்பு, உணர்வு இருக்கும் என்பதை சிறிதும் புரிந்து கொள்ள முயன்றார்களா? எனக்குத் தெரியும் சால்வன் என்னை மறுத்தது பீஷ்மன் என்னைத் தூக்கிச்சென்றான் என்பதற்காக மட்டுமல்ல. அவனது அரண்மனையில் நின்றபோது என் ஒழுக்கம் மாறுபட்டிருக்கக் கூடுமோ என்ற ஐயத்தால்தான் என்பதை புரிந்து கொள்ள முடியாத அளவு முட்டாளா நான்?

தன்னிலேயே நம்பிக்கை இல்லாத சால்வனிடம் மனதைக் கொடுத்தது என் தவறுதான். ஆனால் இந்த பீஷ்மன் கடையிலே ஒரு பொருளை வாங்கி வீட்டுக்கு கொண்டுபோய்க் காட்டி, பிடிக்கவில்லை என்பதும் திருப்பிக் கொடுப்பதும் போலல்லவா என் வாழ்வுடன் விளையாடினான். ஒரு பட்டாம் பூச்சிபோல் விளையாடித் திரிந்த என்னை, சிட்டுக்குருவிபோல் கட்டற்று பறந்த என் சிறகுகளை ஒடித்து என்னைக் காயப்படுத்தியதும் அல்லாமல் காயத்துக்கு மருந்து போட மறுத்த அவன் மிருகத்தனத்தை என்னவென்று சொல்ல?

எவனோ ஒருவனின் கதையைக் கேட்டு என்னில் ஐயுற்ற இராமன், வேடம் புனைந்து வந்து என்னை ஏமாற்றிய இந்திரன், தானும் இந்திரனிடம் ஏமாந்துவிட்டுத் தன் ஆற்றாமையால் என்னில் சினந்த கௌதமன்... இப்படி இவர்கள்போல் இன்னும் எத்தனையோ பேரை நான் காலம் காலமாக கண்டு வருகின்றேன். இது போன்றவர்களிடம் இன்னும் ஏமாந்து போக நான் என்ன மூளையே அற்றவளா?

*என்னை அறிவால் மடக்குவதில் தோற்று, பின் என் உணர்வுகளை கொச்சைப்படுத்தி இழிவுபடுத்தி என்னை ஏறி மிதித்த இவர்கள் இப்போது என்னவென்றால் என் உரிமைக்காக தாம் குரல்(?) எழுப்பப் போகிறார்களாம். என் விடுதலைக்காக தாம் வழியமைக்கப் போகிறார்களாம். என்னை தம் பின்னால் வரட்டாம். எப்படியிருக்கிறது?*

*அடப்போடா பைத்தியக்காரா! அன்றொரு நாள் ஜனகனின் மகாசபையில் 'உன் தலை அறுந்து விழும்' என்று நீ கத்தினாயே. அன்றே நான் உன்னை நன்றாக அறிந்து கொண்டேன். நான் நடக்கும் போது பாதையை நீ தீர்மானிக்கத் தேவையில்லை. என் வழியில் நீ குறுக்கே பாய்ந்து விழாமல், விலகி நடப்பாயானால் அதுவே போதும். என் வழி எனக்குத் தெரியும். அதற்காக, இந்த உலகம் உள்ள வரையும் நீயும், நானும் தனித்தனி வழிகளில்தான் பயணம் என்று உன்னை நான் தள்ளி வைக்கவும் இல்லை. என் பாதை உனக்குத் தடை செய்யப்படவும் இல்லை.*

*என் உணர்வுகளைப் புரிந்து கொண்டு, என் திறமைக்கு மதிப்பளித்து என் ஆளுமையை கௌரவிக்கக்கூடிய மனிதர்கள் என்னோடு என் வழியில் எப்போதும் நடக்கலாம். என்னுடன் கைகோர்த்து நடக்க நீ தயாரானால், என் பாதையில் வரலாம். என் கைகளைப் பிணைத்துக் கட்டி, உன் பின்னால் என்னை இழுத்துத்தான் திரிவாயானால், நீ உன் பாதையிலே போ. நான் என் சிறகுகளை அகல விரித்து பறக்கத் தொடங்கி நீண்ட நாட்களாயிற்று. மண்ணிலே உள்ள கூண்டு, பொன்னால் ஆனதாக இருந்தாலும், இனி அதற்குள் நான் வந்தமரப்போவதில்லை. இந்நத மண்ணிலே எத்துணை பசிய புல்வெளிகளும், பச்சை மரங்களும், ஆற்றோரங்களும், கடற்கரைகளும் உள்ளன நான் இறங்கி இளைப்பாற. ஆனால் என் மனதின் கதவுகள் நல்ல மனிதர்களின் வருகைக்காக அகலத் திந்தபடியேதான் உள்ளன.*

## *சனல் - 4*

– ***வெற்றிச்செல்வி*** *("காணாமல் போனவனின் மனைவி" சிறுகதை தொகுப்பு, சோழன் படைப்பகம், 2012, இந்தியா)*

*சனல்-4 கானொளியை பார்க்க வேண்டும் என்ற ஆவல் முகுந்தாவிடம் கொஞ்சம்கூட இருக்கவில்லை. அவள், அறியாத, காணாத, கேள்விப்படாத மரணங்களா அதில் புதிதாக இருந்துவிடப் போகின்றன? யுத்தம் முடிந்ததாகச் சொல்லி மூன்று ஆண்டுக்ள ஓடிவிட்டாலும்; அவள் கண்ட பிணங்களின் கோலங்கள் மட்டும் நினைவில் நின்ற இடத்திலேயே நிற்கின்றன. அழிக்க முடியாத பதிவுகளாய் மூளையில் பதிந்துவிட்ட அவை மரணம் தாண்டியும் அந்த ஆத்மாவை அமைதியாக வாழ விடுமா தெரியவில்லை; மறந்துவிட வேண்டும். கொஞ்ச நாட்களுக்காகவாவது மனதை அலட்டிக்கொள்ளாமல் நிம்மதியாக இருக்க வேண்டும் என்பதுதான் அவளின் விருப்பம். முடிகிறதா?*

*இதோ நிமலன் தொலைபேசியில் குமுறுகிறான். "முகுந், ஒருக்கா அதப்பார். நம்மட அருணாவின்ர தமையன் இருக்கிறான். அதப்பாக்க உனக்கு விருப்பமிருக்காதெண்டு எனக்குத் தெரியும். எண்டாலும் அவளுக்காக அருணாவுக்காக ஒருக்கா பார்".*

*அருணா பெற்றோரின் நான்கு பெண் பிள்ளைகளில் ஒருத்தி. அவளுக்கு நேர்மூத்தவனான அருளன்தான் போராட்டத்தில் இணைந்திருந்தான். அதன் பின்பு இறுதிப்போரில் காணாமல் போனவர் பட்டியலில் அவன் இருந்தான். இப்போது இறந்தவர் பட்டியலுக்கு இடம்பெயர்ந்திருக்கிறான் போலும். இந்த உண்மையை அருளனின் குடும்பம் தாங்குமா? அது ஏற்றுக்கொள்ளாது. அதை ஏற்க மறுத்துக் குமுறிவெடித்துவிடும். அந்தக் குடும்பம் அருளனின் வருகைக்காக இல்லாவிட்டாலும் அவனின் இருத்தலுக்காக நாளாந்தம் மன்றாடிக் கொண்டிருக்கும் குடும்பம். தங்களின் முன் வாழதவிட்டாலும் எங்கேயோ ஒரு மூலையில் அவன் உயிருடன் இருப்பான் என்ற நம்பிக்கை*

அவர்களுக்குண்டு. இப்படியான நம்பிக்கைகள் தான் இவ்வாறான எத்தனையோ பேரின் கவலைகளை கொஞ்சமாவது போக்கிக்கொண்டிருக்கிறது.

முகுந்தா தோள்ப்பையை எடுத்து மாட்டிக்கொண்டு வீட்டுக்கு அருகிருந்த 'இண்டர்நெற் கபேக்கு' ஓடினாள். சனல்-4ஐ தான் பார்க்க மாட்டேன் என்று நினைத்துக்கொண்டிருந்த முடிவை மறந்துவிட்டாள். விசைப்பலகையில் அவளது விரல்கள் தட்ட சனல்-4 பக்கங்கள் திறந்து விடப்பட்டது. விரிந்த படங்களின் காட்சி... அவளின் நாசியில் மீண்டும் ரத்த வாடை விசுக்கியடித்தது. மனதில் ஆயிரம் முட்களாய் குத்தியது வலி. நினைக்கக்கூடத் தயங்கிய நினைவுகள் ரத்தமும் தசையுமாய் கண்முன் காட்சித்திரையில் விரிந்தன. தலையை ஒரு உள்ளங்கையால் தாங்கிக்கொண்டு அருளனைத் தேடினாள். அருளனை மட்டும் தான் தேடினாள்.

இதோ அருளன் கிடைத்துவிட்டான். அருளனேதான். அவளின் உயிர்ச்சிநேகிதி அருணாவின் தமையனேதான். அவன் இறந்துவிட்டான் என்பதை மட்டுமல்ல எப்படி சாகடிக்கப்பட்டான் எனபதையும் சொல்லிக் கொண்டிருந்தது அந்த வீடியோ காட்சி.

விரிந்திருந்த திரையின் பக்கத்தைச் சட்டென்று மூடிவிட்டு எழுந்தாள். தலைச்சுற்றியது. மீண்டும் கதிரையில் அமர்ந்து இரண்டு கைகளாலும் தலையைத் தாங்கிக்கொண்டாள். மனசு அருணாவிடம் ஓடியது. தோள்களில் விழுந்து அவளோடு சேர்ந்து கதறியது. அருளனின் அம்மாவுக்கு ஆறுதல் சொல்லியது. அவர்களின் வீட்டில் அவர்களுக்காக பூசைபோட்டு எல்லோரும் அழுது தீர்த்துவிட்டு ஊருக்கெல்லாம் ஒருமுறைசாப்பாடு போடச் சொன்னது. அவனின் மரணத்தை உறுதிப்படுத்தி அம்மாவின் தேடலை நிறுத்திவிடச் சொன்னது.

மீண்டும் எழுந்த முகுந்தா கவுண்டரில் காசைக் கொடுத்துவிட்டு வெளியே வந்தாள். நிமலனுக்கு அழைப்பெடுத்தாள்.

*“அது அருள்தானடா”*

*“பாத்தியா நான் சொன்னன். அருணாவ மாதிரியே இருக்கிறான். அந்த முகச்சாயலாலதான் கண்டனான் முகுந். இத எப்படி அவங்களிட்ட சொல்லப்போறாய்?”*

*“சொல்லத்தானேடா வேணும். நான் இண்டைக்கே அவங்க வீட்ட போறேன். உன்னோட பிறகு கதைக்கட்டுமா?”*

*“சரிடி. எனக்கு ஏலுமெண்டா உன்னோட வந்திருவன்.”*

*“சரி. சரி. எனக்குத் தெரியுந்தானே. நான் போட்டு வாறன் ஓ.கே.”*

*“ஓ.கே வைக்கிறன்” என்று தொலைபேசி அழைப்பை துண்டித்த நிமலனின் உணர்வுத்துடிப்பை நினைக்கவும் வேதனையாகத்தான் இருந்தது. அவனுக்கு உடலில் இல்லாமல்போன உணர்ச்சி முழுவதும் மனதிற்குள் வாழ்கிறது போலும். மனதில் துடிப்பும் துள்ளலுமாய் சுறுசுறுப்பாயிருக்கின்ற, பிறர் நலனில் அதிக அக்கறை காட்டுகின்ற அவனுக்கு, நடக்கவே முடியாதளவுக்கு அமைந்துவிட்ட வாழ்க்கையை நினைத்து வேதனைப்பட்டுக் கொள்வதைவிட வேறு என்னதான் செய்ய இயலும்.*

*முகுந்தாவின் கால்கள் வீட்டுக்கு வந்தன. மனம் அருணாவின் வீட்டிலேயே நிற்கிறது. கைகள் ஒரு சோடி உடையை பையொன்றுக்குள் திணித்தன.*

*“அக்கா நான் அருள் வீட்ட போயிட்டு வாறன். நாளைக்குத்தான் வருவன்” என்று வாய் சொன்னது. அக்கா எப்போதும் போல பதிலொன்றும் சொல்லாமல் இருந்தாள். கொஞ்ச நேரத்தின்பின் புறுபுறுப்பாள் என்பதைப் பற்றி முகுந்தா கவலைப்படவில்லை. அவள் பெற்றோரையும் உறவினரையும் இழந்து தனிக்கட்டையான பிறகு இந்த ஒன்றுவிட்ட அக்காதான் எல்லாம்*

*என்று நினைத்திருந்தாள். ஆனால் அக்கா எப்போது இவள் வீட்டை விட்டே தொலைவாள் என்று இருக்கிறாள்.*

*வீதிக்கு விரைந்த முகுந்தா கிளிநொச்சிப் பேருந்தில் ஏறி அமர்ந்தபோது நெற்றியிலிருந்து வழிந்த வியர்வைத்துளிகள் அவள் கைக்குட்டையை எடுக்கவில்லை என்பதை ஞாபகப்படுத்தியது. வியர்வையை புறங்கையால் துடைத்துவிட்டு அமைதியாக இருக்க முயன்றாள். மனதென்னவோ ஆர்ப்பரிப்பை நிறுத்தவில்லை.*

*பலமணிநேரப் பயணத்தின்பின் கிளிநகரில் இறங்கினாள். உடனேயே ஆட்டோ ஒன்றைப் பிடித்துக்கொண்டு அருளின் வீட்டுக்குச் சென்றபோது அங்கு அவளுக்கு அமோகமான வரவேற்பு.*

*“ஹேய்! என்னடி? சொல்லாமல் கொள்ளாமல் வந்திருக்கிறாய்? ஒரு கோல்பண்ணக்கூடாதோ?” என்று அருணா அவளின் கையைப்பிடித்துக்கொண்டு கோபித்தாள். கையை முஷ்டியாக்கி அவளின் தோளில் குத்தினாள். ஹேய் என்று அவள் போட்ட கூச்சலில் குசினிக்குள் இருந்த அம்மா வெளியே வந்தார்.*

*“வாம்மா வா. என்ன ஒரு அறிவித்தலும் இல்லாம வந்திருக்கிறாய்?” என்றவாறு அருணாவின் அம்மா முகுந்தாவை உச்சிமுகர்ந்தார்.*

*“வரோணும் போல இருந்திச்சம்மா. வந்திட்டன். ஏன் சொல்லாம வரக்கூடாதா?” என்று சிரிக்க முயன்றாள் முகுந்தா. அவளுக்குள் இருந்த துயரம் கண்ணீராயும் குமுறலாயும் வெடித்துவிடத் தயாராக இருந்தது.*

*“என்னடி ஒரு மாதிரியாய் இருக்கிறாய்? என்ன நடந்தது. வீட்டில அக்காவோட ஏதும் பிரச்சனையா?” என்று அக்கறையோடு கேட்ட தோழியில் கோபம் வந்தது.*

*“இல்லடி கொஞ்சம் சும்மா இருக்கிறியா?” என்று சினந்தாள் முகுந்தா.*

*“என்னம்மா ஏதும் பிரச்சினையாம்மா” என்று தாயாரும் அக்கறையோடு வினவ அவளுக்கு கவலையாகிவிட்டது. எனினும் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண்டாள்.*

*“சீச்சி. அப்பிடியெல்லாம் ஒண்டுமில்லை. கனதூரம் பஸ்ஸில வந்தது. தலையிடிக்குது” என்றாள் நெற்றிப்பொட்டை அழுத்தி.*

*அருளனின் மரணச்செய்தியை சொல்லத்தான் வந்திருக்கிறேன். அதைச் சொல்லவா சொல்லாமல் விடவா என்று புரியாத திண்டாட்டம்தான் இப்போது என்னை படாய்படுத்துகிறது என்பதை அவளால் சொல்லமுடியவில்லை. இயல்பான கலகலப்பில் தற்போதிருக்கும் அந்தக் குடும்பத்தில் மீண்டும் கண்ணீரையும் கதறலையும் காண அவளுக்கு மனசில்லாமல் இருந்தது.*

*“எழும்பு. முதல்ல போய் முகத்த கழுவிட்டு வா” என்று அவளை இழுத்தாள் அருணா.*

*“அம்மா முகுந்துக்கு சுடச்சுட ஒரு தேத்தண்ணி ஆத்துங்கம்மா” என்றாள். அருணாவின் கையை முகுந்தா இறுகப்பிடித்தாள்.*

*“என்னடி? உனக்கென்னமோ நடந்திட்டுது. என்னெண்டு சொல்லு” என்று அக்கறையோடு கேட்டாள் தோழி. எனினும் அவளது புன்னகையில் குறும்பு தெரிந்தது. தமையனின் தொலைவுக்காக அவள் விம்மியழுத நாட்கள் இப்போது கொஞ்சக் காலமாகத்தான் காணாமல் போய், மீண்டும் அவளிடம் இந்த புன்னகை முகம் வந்திருக்கிறது. இந்தப் புன்னகை மீண்டும் தொலையத்தான் வேண்டுமா? முகுந்தாவின் மனதில் ஒருநூறு கேள்வி ஒன்றாய்.*

வேதனையோடு புன்னகைத்த முகுந்தா, ‘‘ஏலாம இருக்கடி’’ என்றாள்.

‘‘அஞ்சு ஆமைய யாருக்கும் குடுத்திடு. ஒரு ஆமைய என்னட்டத் தா. ஏழையும் வச்சிருந்தா கஷ்டமாத்தான் இருக்கும்’’ என்று கிண்டல் செய்து குலுங்கிச்சிரித்த அருணாவின் சிரிப்பில் அழுகையை வீச முகுந்தாவால் முடியவில்லை.

‘‘என்னய கிணத்தடிக்கு தூக்கிக்கொண்டு போ’’ என்று சிணுங்கியபடி கைகளை விரித்தாள் போலியாக. அவளுக்கு ஒன்றுமேயில்லை என்பதை அவர்கள் நம்ப வேண்டாமா?

அருணா உண்மையாகவே அவளை வாரியள்ளி தூக்கிக்கொண்டு போய் தொப்பென்று கிணற்றடியில் இறக்கினாள். புத்தகமும் கையுமாக கிணற்றடி வாழையடியிலிருந்த தங்கைகள் இருவரும் தோழியரின் அன்பைப் பார்த்து கெக்கட்டம்போட்டுச் சிரித்தார்கள்.

இந்தச் சிரிப்பலையில் அவளேன் மீண்டுமொரு நெருப்பு மூட்ட வேண்டும்?

# எதுவரை

***-மலைமகள்*** *("வெளிச்சம்", வி.பு கலை பண்பாட்டுக் கழகம், 1999 ஆனி-ஆவணி, -மறுபதிப்பு "மலைமகள் கதைகள்" சிறுகதை தொகுப்பு, கப்டன் வானதி வெளியீட்டகம் – வி.பு மகளிர் பிரிவு, 2004)*

முன்னணிக் காலலரண்களை மேலும் முன்னுக்கு நகர்த்தும் வேலை அன்று மும்மரமாக நடந்துகொண்டிருந்தது. சும்மாவே அவர்களுக்குச் சற்றுப் பெரிய தொண்டை. வழமையைவிட அன்று கூச்சலும் கும்மாளமும் இன்னும் அதிகமாக இருந்தது. ஓடிப்போய் அருகிலிருந்த பிஞ்சுப் பனையோலைகளை வெட்டுவதும், மிதித்து பாடம் போடாமலேயே அதை வேலியில் கட்டுவதுமாக (ஓலைகளை நாம் பாடம் போடும்வரையில் இராணுவம் சும்மா இருக்குமா, என்ன?) வேலி மளமளவென்று உயர்ந்துகொண்டிருந்தது. வேலியில் இன்னதுதான் வைத்துக் கட்டுவது என்றெல்லாம் இல்லை. கையில் எதுவெல்லாம் அகப்படுகிறதோ அதுவெல்லாம் அவர்களின் கைவண்ணத்தில் வேலியில் அரங்கேறிக்கொண்டிருந்தன. ஓயாத அலைகள் 02இன் போது படையினர் வீசியெறிந்துவிட்டு ஓடிய மழைப் பாதுகாப்பு உடைகள், ஏற்கனவே கட்டப்பட்ட வேலியில் எறிகணைகள் விழுந்ததால் நெளிந்து, பின் எங்கள் காந்தள் மென்விரல்களால் தட்டிக்கொட்டி நிமிர்த்தப்பட்ட தகரங்கள், எல்லாவற்றையும் வைத்து, தந்திக் கம்பிகள், சாறத்திலிருந்து கிழிக்கப்பட்ட துணிகள், இராணுவத்தினரின் பிய்ந்துபோன பாதணிகளிலிருந்து எடுக்கப்பட்ட நூல்கள் என்பவற்றால் வரிந்து கட்டியவாறு இந்த சுறுசுறுப்பான சிட்டுக் குருவிகளின் அணி வேலியை நீட்டிக்கொண்டேயிருந்தது.

"ஏய் சத்தம் கூடுது. அவன் செல் குத்தப்போறான்."

என்று யாராவது ஒருத்தி சுய உணர்வு வந்து அதட்டும் போது குறையும். பின்னர் மெல்ல மெல்ல ஏறும். பிறகு யாரேனும் அதட்ட குறையும். அனுபவமுள்ள ஒருத்தி அவர்களின்

பொறுப்பற்ற தன்மையைக் கண்டிப்பாள். அவளை அங்கே நிற்கும் சின்னன் ஒன்று கிண்டல் செய்யும்.

''ஏன் பழஞ்சீலை கிழியிறமாதிரிப் புறுபுறுக்கிறாய்'' அதற்கு அவள் கண்டிப்பாள்.

''பேய்க்கதை கதையாதை. ஒரு செல் தலையில் விழுந்தா தெரியும்''

அதற்குள் ஒருத்தி கையிலிருந்த எல்லாவற்றையும் தொப்பென்று போட்டுவிட்டு அருகிலே பதுங்குகுழி வெட்டிக் கொண்டிருப்பவர்கள் குவித்த மண் கும்பியிலே மெத்தையிலே படுப்பதுபோல் படுத்துக் கால்களை ஆட்டியவாறு,

''சரி சரி. வேலை செய்து களைச்சுப்போனோம். அந்த றோல்சையும் தக்காளி சோசையும் கொண்டு வாங்கோ. சாப்பிட்டு வேலை செய்வம்'' என்று சீரியசான குரலில் சொல்ல, பக்கத்திலிருந்தவள் கொடுத்தாள் ஒரு அடி.

''ஏன்ரி இல்லாததுகளை நினைவுபடுத்தி வாயை பழுதாக்கிறாய்'' என்று அவள் எரிச்சலாக ஏச, மண்வெட்டியுடன் பதுங்குகுழியுள் நின்று பக்கச் சுவர்களை செதுக்கிக்கொண்டிருந்தவள் மண்வெட்டியைப் போட்டுவிட்டு மேலே ஏறினாள்.

''பொறுங்கோ. நான் இவளை முதல்ல இந்த பங்கருக்குள்ளே போட்டுவிட்டுத்தான் அடுத்த வேலை''

என்றவள் கும்பியில் படுத்திருந்தவளை உருட்டிவிட, அவள் வெகு லாவகமாக உடலை வளைத்துச் சரிந்து, கீழே விழாமல் பதுங்குகுழியில் நேராகக் குதித்து, வெட்டப்பட்ட படிகளால் மேலேறி வந்து அவளுக்கு நையாண்டி காட்ட, அவளை இவள் துரத்த, அவள் ஓட, எல்லோரும் வேலையை விட்டுவிட்டு அவர்களைப் பார்த்துக் கைகளைத் தட்டிக் கூக்குரலிட.

களமுனை வாழ்வில் வருகின்ற இந்த நிமிடங்கள் பொன்னானவை. வெளியில் யாருக்குமே இந்த உணர்வுகளை முழுமையாகப் புரிந்துகொள்வது கடினம். இப்படியெல்லாம் இராணுவ முன்னணிக் காவலரண் வரிசைக்கு அருகிருந்து குதித்து கும்மாளமடித்துவிட்டு, ஒரு நாள் எங்களில் ஒருவரை தாயகமண் தனது மடியில் கிடத்தி கல்லறை எழுப்பும் போது எங்களில் ஏற்படும் உணர்ச்சிகள். அதையும் புரிந்துகொள்வது கடினம். கூடவேயிருந்த ஒருத்தியின் இழப்பு எம்மை வலுக்கொள்ள வைக்குமே தவிர, கிலிகொள்ள வைக்காது. அறிவு தெரிந்த நாளிலிருந்தே கூடிவாழ்ந்த உறவுகளைக்கூட பிரியமுடிந்தவர்களால், இழந்துபோன தோழியரின் நினைவு சுமந்த காவலரண் வேலிகளை, களமுனைத் தோழிகளை மட்டும் பிரிய முடிவதில்லை.

ஒருத்தி ஓட மற்றவர்கள் துரத்த, அடுத்தவர்கள் கூக்குரலிட, எழுந்த ஓசையை அவர்களுள் ஒருத்தியின் குரல் கட்டுப்படுத்தியது.

''சத்தம் போடாதையுங்கோ. நிலம் வெடிக்கப் போகுது. வீட்டில் இருந்தா இப்படியெல்லாம் குதியன் குத்தியிருப்பியளே? சத்தம் போமாமல் ஒரு மூலையில் இருந்திருப்பியள்.'' இதற்கு அங்கு நின்ற கிலுக்கிட்டான் ஒன்று சட்டெனப் பதிலளித்தது.

''அதுதானே வீட்டில இல்லாமல் இஞ்ச வந்து நிக்கிறம்'' மீண்டும் ஒரு முறை எல்லோரும் கொல்லென்று சிரிக்க, அதற்குள் துரத்தப்பட்ட இருவரும் சமாதானமாகி கைகளைக் கோர்த்தவாறு வர,

''சரி இனி வேலையை தொடங்குவம்'' என்று எழும்பிய குரலை, சாப்பாடு எடுக்கப்போய் வந்து கொண்டிருந்தவர்களுள் ஒருத்தியின் கூக்குரல் அமுக்கியது.

''வால் குடுத்து கத்தி வாங்கினேன் டும்டும்டும், கத்தி குடுத்து துவக்கு வாங்கினேன் டும்டும்டும், துவக்கு குடுத்து செபெசல் வாங்கினேன் டும்டும்டும்''

என்று ஏதோ தனக்குத் தெரிந்த மாதிரியெல்லாம் நடனமாடி, வாயில் வந்தவற்றையெல்லாம் பாடியவாறு வந்தவளின் கையில் ஒரு சொப்பிங் பை. அதற்குள் அன்று அவர்களுக்கென்று (நீண்ட நாட்களின் பின்) ஏதோ சிற்றுண்டி வந்திருக்கிறதென்பது அவர்களுக்குப் புரிந்துவிட்டது. சும்மா ஒன்றுமில்லாததற்கே கூத்தாடுகின்ற இவர்கள் தமக்கு விருப்மான ஒன்று வந்தால்...

''என்ரை வாயாலை றோல்சைப்பற்றி நான் கதைச்ச நேரம் நல்ல நேரம்'' என்று மார் தட்டினாள் ஒருத்தி.

''தான் கூவித்தான் சூரியன் உதிக்கிறது எண்டு எப்பவோ ஒரு சேவல் சொன்ன ஞாபகம் வருகுது'' என்று கேலி பேசினாள் இன்னொரு குறும்புக்காரி.

''மெடிக்ஸை வரச் சொல்லுங்கோ. அவசரமாக் கட்டுப்போடவேணும். ரத்தம் வீணாகப் போகுது'' என்று அவசரப்பட்டாள் றோல்ஸ்காரி.

''ஏன்? என்ன பிரச்சனை?'' என்று எல்லோரும் அந்தரப்பட, இவள் வலு ஆறுதலாகப் பதிலளித்தாள்.

''அவள் பாவம். வாலைக் குடுத்தெல்லோ எங்களுக்குச் சாப்பிட என்னவோ வாங்கியிருக்கிறாள்.'' மீண்டும் ஒரு முறை எல்லோரும் சிரித்துவிட்டு, சாப்பாட்டுப் பையை ஆவலாகப் பார்க்க,

''கொண்டு வா நான் பிரிக்கிறன். குரங்கு அப்பம் பிரிச்ச மாதிரி'' என்று சொன்னவாறு பையுள்ளிருந்த வடையொன்றை எடுத்து வாயில் போட்டுவிட்டுத் திருப்தியாகத் தலையை ஆட்டியவாறு,

''ரேஸ்ட், இந்த வடைக்காக தலையாலைதான் நடக்கவேணுமெண்டாலும் பரவாயில்லை, நடக்கலாம்.''

*என்றவாறு எல்லோருக்கும் பங்கிடத் தொடங்க ஒருத்தி குறுக்கிட்டாள்.*

*"ஒரு வடைக்காக தலையாலை நடக்கலாம் எண்டு சொல்லுறாய் அப்ப நீ நல்ல சாப்பாடு கிடைக்குமெண்டா அதுக்காக எதையும் செய்வியோ?"*

*"இல்லை"*

*அவள் பதில் சட்டென வந்தது. என்ன சொல்லப்போகிறாள் இவள் என்று எல்லோருமே ஆவலாகத் திரும்பினர்.*

*"தன்ரை பிள்ளையள் பிழை விடாதுகள். சும்மா வாயடிக்குதுகளே தவிர வேலையில சரியான கெட்டிக்காரிகள். இதுகளை நம்பி எந்த வேலையையும் குடுக்கலாம் எண்டு அண்ணை எங்களில் நம்பிக்கை வைச்சிருக்கிறாரெல்லோ. அந்த நம்பிக்கைக்கு மாறாக நடக்காமல் வேற ஏதாவது செய்வன். நான் ஒருத்தி விடுற பிழை, எல்லாப் பிள்ளையளிலையும் அவர் வைச்சிருக்கிற மதிப்பைக் கெடுக்கிறதை நான் விரும்பேல்லை."*

## புதிய கதைகள்

*–**மலைமகள்** ("வெளிச்சம்", வி.பு கலை பண்பாட்டுக் கழகம், July-Aug 2002, – மறுபதிப்பு "மலைமகள் கதைகள்" சிறுகதை தொகுப்பு, வி.பு மகளிரிர் பிரிவு, கப்டன் வானதி வெளியீட்டகம், 2004)*

### *குறிப்பு*

*இக்கதையில் மலைமகள் ஆயுதப்போராட்டத்தில் குறிப்பிடத்தக்க பல நிகைழ்வுகளை மாலை போல் கோர்க்கிறார். இந்நிகழ்வுகளுக்கு இடையில் பல வருடங்கள் சென்றிருக்கின்றன. இவற்றூடாக மக்களிடையே தோன்றிய ஒரு புது விழிப்புணர்வை அவர் காட்ட விளைகிறார்.*

*அக்டோபர் 1986 இல் இடம்பெற்ற அடம்பன் போரிலேயே பெண் போராளிகள் முதன் முதலாக போர்க்களத்தில் பங்குபெற்றார்கள்.*

*2ம் லெப் மாலதியையே களத்தில் உயிர் நீத்த முதல் பெண் மாவீரராக விடுதலைப்புலிகள் சொல்கின்றனர். ஆனால் லெப் 1985 இல் உயிர்நீத்த சோபா என்ற பெண்ணே முதல் பெண் மாவீரராவார். இவர் ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணியை சேர்ந்தவர் (EPRLF).*

*கடற்புலி பெண் போராளிகள் காற்சட்டை அணிவது அக்காலத்தில் ஏற்கமுடியாத ஒன்றாக இருந்தது.*

*அங்கயற்கண்ணி முதல் பெண் கடற்புலி மாவீரராவார்.*

*****

*யாரிடமும் அச்சமில்லை. போர் அனுபவம் அதிகமில்லை. எனினும் விடுதலை முனைப்பு. கோப்பாய் கிரேசடியில் அவர்கள் எதிரிக்கான வலையை விரித்தார்கள்.*

*(இதைத் தொடர்ந்து தாயகமெங்கும் இழுத்து விரிக்கப்பட்ட வலைகளில் சிக்கி அசோகச் சக்கரம் சீராக உருள முடியாமல் திணறியது தனிக் கதை.)*

*(Operation Bawan) பவான் நடவடிக்கையைத் தொடங்கிய இந்திய அமைதி காக்கும்(?) படையினர் யாழ்பாண நகரப்பகுதியிலிருந்து நகரத்தொடங்கியிருந்தனர். இதைச் சற்றும் எதிர்பாராத மக்கள் நம்ப முடியாத அதிர்ச்சியுடன் வாசல்களைப் பூட்டிக்கொண்டு வீடுகளுக்குள் அடைந்துகொண்டனர். விடுதலைப்புலிகள் மகளிர் படையணியின் ஒரு அணி 2ம் லெப் மாலதி, கஸ்தூரி, தயா, விஜி இன்னும் சிலர் கோப்பாய் வெளியில் எதிர் நடவடிக்கைக்கு தயாராகிக்கொண்டிருந்தனர்.*

*ஐப்பசி மாதம், மழைக்காலம். எனினும் இன்று வானத்து நட்சத்திரங்கள் இருட்டடிப்புச் செய்யப்படவில்லை. நிலவு தலைக்கு மேலே மிதந்துகொண்டிருந்தது. கண்களை கூசச்செய்யும் ஒளியுடன் ஊர்திகள் கோப்பாய் கைதடி வீதியில் திரும்பின. காவல் கடமையில் நின்றவர் யாருடைய ஊர்தியென்று அறிவதற்காக எழுந்து நின்றார். வந்த ஊர்திகள் சடுதியில் நின்றன. அதில் வந்த இந்திய இராணுவத்தினர் குதித்தனர். நூறு நரிகள் சேர்ந்து ஊளையிடுவது போன்றதொரு ஒலியை எழுப்பியவாறு இவர்களை நோக்கி ஓடிவந்த படையினரை இவர்களின் துப்பாக்கிகள் வரவேற்றன.*

*இரவின் அமைதியை குலைத்தவாறு அந்த வெளியில் சண்டை நடந்தது. இந்திய இராணுவம் தன் வரலாற்றிலேயே முதன் முறையாக ஒரு பெண்கள் படையணியோடு மோதியது. பெண்கள் பற்றி அவர்களிடமிருந்த கற்பனைத் தத்துவங்கள் உடைந்துவிழுகின்ற அளவுக்கு அந்த சண்டை நடந்தது.*

*தனது தொடையில் ஏற்பட்ட காயத்தைப் புரிந்து கொண்ட மாலதி தன் கையிலிருந்த சுடுகலனை வீரவேங்கை விஜியிடம் கொடுத்தார்.*

*"இதைக் கொண்டுபோய் அண்ணையிட்டைக் குடு. நான் குப்பி கடிக்கப்போறன்"*

*மாலதியை விட்டுப்போக விஜி தயாராக இல்லை.*

*"நான் உன்னை விடமாட்டன் மாலதி"*

*விஜி மாலதியை இழுத்துப்போக முயற்சித்தார். ஆனால் மாலதியின் உறுதியே வென்றது.*

*"இதைக் கொண்டுபோய் அண்ணையிட்டைக் குடு"*

*அந்த நேரம் மிகவும் அரிதாகவும் எல்லோரது நேசிப்புக்கும் உரியதாக இருந்த M16ஐ தங்களெல்லோருக்கும் தருவதற்காக தலைவர் எடுத்த முயற்சிகளைப் புரிந்து கொண்டதனால், அன்றைய சூழலில் உலகின் நான்காவது வல்லரசுடனான போரில் அந்த ஆயுதம் ஆற்றவேண்டிய பங்களிப்பை புரிந்துகொண்டதனால் வந்த வார்த்தைகள்.*

----

*திண்ணை மாநாட்டில் ஒன்றுகூடியவர்களுக்கு இதை நம்பச் சற்று (சற்று என்ன சற்று? முற்றுமுழுதாகவே) சிரமமாக இருந்தது.*

*"உந்தப் பெரிய இந்தியன்காரன் நடுச்சாமத்தில் முன்னால் வந்து நிக்கேக்கை, உந்தப் பொடிச்சியள் அவங்களை சுட்டிருக்குங்களோ?"*

*ஏற்கனவே லெப் கேணல் விக்ரர் அவர்கள் வீரச்சாவடைந்த மன்னார் அடம்பன் சண்டையில் மகளிர் படையணி*

*பங்கேற்றிருந்ததான கதைகளை அரையும் குறையுமாக கேள்விப்பட்டிருந்தபோதும், அவர்களது ஐயங்கள் தெளியவில்லை. கேள்விகளோடு மாநாடு தொடர்ந்தது.*

*அரங்கம்: பருத்தித்துறை துறைமுகத்தடி*
*காலம்: 1993 நடுப்பகுதி*
*பார்வையாளர்கள்: துறைமுகத்தடியில் நின்ற திண்ணைமாநாட்டாளர்கள்.*
*நடிகர்கள்: கடலில் கைகளை வீசிக் கால்களை அடித்தவாறிருந்த சில தலைகள்.*

*காட்சி புள்ளிகளோ, கோடுகளோ விழாமல் மிகத் தெளிவாகத் தெரிகிறது. கடலில் கொஞ்ச மனிதர்கள் நீந்துகிறார்கள். அது தெரிகிறது. அரைக் காற்சட்டைகள் அணிந்திருக்கிறார்கள்.*

*“ஆம்பிளையா?”*

*தலையில் முடி கொண்டையிட்டிருப்பதுபோலவும் தெரிகிறது.*

*“பொம்பிளையளோ?”*

*“என்ன பொம்பிளையளோ?”*

*“அதுவும் காற்சட்டைகளோடையோ?”*

*“கடல் பொங்கி ஊரை அழிக்கிறதுக்குத்தான் உந்த கூத்தெல்லாம் நடக்குது”*

*“அப்பிடியெண்டா வெள்ளைக்காரனின்ர கடலுமெல்லே பொங்க வேணும். அங்க எல்லாரும்தானே குளிக்கினம்” இது ஒருவர்.*

*“அது ரோசமில்லாத கடல். பேசாமல் கிடக்கும். எங்கட கடல் அப்பிடியே” இது மற்றவர்.*

*திண்ணை மாநாட்டாளர்களின் அனல் பறந்த கருத்துப் பரிமாறல்களுக்கிடையில் கடற் புலிகள் மகளிர் படையணி ஐந்து மைல் நீச்சலை நிறைவு செய்து, தனது கடல் நடவடிக்கைகளை ஆரம்பித்து விட்டிருந்தது. மாநாடு முடிவுறவில்லை.*

*கிளாலி கடல் நீரேரியில் பயணம் செய்த மக்களை தாம் விரும்பிய நேரங்களிலெல்லாம் கொன்று குவித்துக்கொண்டிருந்த சிறீலங்கா கடற்படைக்குச் சவால் விட்டவாறு கடற்புலிகளின் படகுகள் விரைந்துகொண்டிருந்தன.*

*மக்களுக்கான பாதுகாப்புப் பணியில் லெப் கேணல் பாமா தலைமையிலான படகுத் தொகுதி ஒன்றும் ஈடுபட்டவாறிருந்தது. அவர்களின் படகுகள் காற்றைக் கிழித்தவாறு, நீர் மட்டத்தை மேலெழுப்பியவாறு எதிரிப் படகுகளை மிரட்டிக்கொண்டிருந்தன. மக்களை நெருங்க முடியாத சிறீலங்காப் படகுகள் தள்ளியே நின்றுகொண்டன.*

*இருளில் கரும் புள்ளிகளாக விரைந்து சாகசம் காட்டுகின்ற இவர்களின் படகுகளில் போகின்றவர்களை உற்று உற்றுப் பார்த்தவாறு, சாவு அச்சமற்று நிம்மதியுடன் திண்ணை மாநாட்டாளர்கள் ஒரு தொடுகையில் (இயந்திரப் படகொன்றுடன் கயிற்றால் பிணைக்கப்பட்டு கட்டி இழுக்கப்படும் ஏனைய பயணிகளின் படகுகள்) பயணம் செய்வதைக் கண்டுகொண்ட கிளாலிக் கடல் நீரேரிக்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை. தனது அலைக்கரங்களை அடித்தவாறு உருண்டு உருண்டு சிரித்தது. நடந்த புதினத்தை கேள்வியுற்ற மீனினங்களும் திண்ணை மாநாட்டாளர் முகங்களைப் பார்ப்பதற்காக நீர் மட்டத்துக்கு மேலே துள்ளித் துள்ளி குதித்தன.*

----

*தென்மராட்சியின் முக்கிய நகரங்களில் ஒன்றான சாவகச்சேரி எங்களிடம். இழந்த நகரை மீளப் பிடிப்பதற்கான கடும் முயற்சியில் சிறீலங்காப் படையினர். மட்டுப்படுத்தப்பட்டளவில்*

நின்ற எம்மவருக்கும் மலையான பலத்துடன் நின்ற படையினருக்குமிடையே அன்று கடும் மோதல் தொடங்கியது. கட்டிடக் காட்டிடையே பக்கம் பக்கமாக இருதரப்பும் நின்று மோதிக்கொண்டன. ஒவ்வொரு காப்பரணும் தமது நிலைமையைச் சொல்லிச் சொல்லி சண்டை பிடித்தது.

''எங்களில் ஒரு ஆள் காயம்''

''ரெண்டு பேர் வீரச்சாவு''

''நானும் காயம்''

''......''

''...........''

பெரும்பாலான எமது காப்பரண்கள் விழுந்து விட்டன. விழுகின்ற கடைசி நிமிடத்திலும் எதிரிகளை விழுத்தின. அந்த ஒரு காப்பரண் மட்டும் விழவேயில்லை. அங்கிருந்து படையினரை நோக்கி எதிர்த் தாக்குதல் நடத்தப்பட்டுக்கொண்டிருந்தது. அதற்குள் நின்றது மேஜர் கயல்விழி.

கயல்விழி இன்னும் முழுமையாகப் படையினரால் சுற்றி வளைக்கப்படவில்லை. எமது கட்டுப்பாட்டுப் பகுதிக்குள் அவர்கள் வருவதற்கு இன்னும் ஒரு பாதை பாதுகாப்பாகவே இருந்தது. அந்த ஒரு பாதையால் வெளியேறி வருமாறும், மீண்டும் அணிகளை மீளமைத்துக்கொண்டு போய் அடித்து இடங்களைப் பிடிக்கலாம் என்றும் வழங்கப்பட்ட கட்டளைகளை கயல்விழி ஏற்றுக்கொள்ளவில்லை.

''கடைசிவரைக்கும் சாவகச்சேரியை விடவேண்டாம்'' என்ற தனது அணியினரின் கடைசி வேண்டுகோளை அவர் ஏற்றுக்கொண்டார்.

*''நான் பின்னுக்கு வரமாட்டன். அந்தப் பாதையால் ரீமை உள்ளுக்கு அனுப்புங்கோ. நான் நிக்கிற இடத்திலிருந்து அடிச்சுக் கொண்டுபோய்ப் பிடிப்பம். விட்டா திரும்பிப் பிடிக்கிறது கஷ்டம்'' இது கயல்விழி.*

*உதவியணிகள் அரியாலையிலிருந்தும், வாதரவத்தையிலிருந்தும் கொழும்புத்துறையிலிருந்தும் வந்து சேரத் தாமதமாகும் என்பது கயல்விழிக்குத் தெரியாததல்ல. எவ்வளவு நேரமானாலும் அவர்கள் வந்து சேரும்வரை தமது நிலைகளைத் தக்க வைப்பதென கயல்விழியும் கயல்விழியோடு நின்றவர்களும் முடிவெடுத்தனர்.*

*இப்போது அவர்களைச் சூழவும் படைகள்.*

*''ரவுண்ட் அப்புக்குள் நிக்கிறம். நாங்கள் சமாளிப்பம். நீங்கள் ஆக்களைத் தாங்கோ''*

*இவர்கள் நின்ற வீட்டின் மதிலோடு படையினரின் தலைகள் தெரிந்தன.*

*''மதிலோடு வந்து நிக்கிறவங்களைச் சுட்டுக்கொண்டிருக்கிறம். ஆக்களை அனுப்புங்கோ''*

*மதிலைக் கடந்து உள்ளே குதித்த படையினர் மதிலுக்கும் அவர்கள் நின்ற காப்பரணுக்கும் இடையே வெட்டப்பட்டிருந்த நகர்வகழிக்குள் இறங்கினார்கள்.*

*''பக்கத்தில வந்திட்டாங்கள். நாங்கள் சுட்டுக்கொண்டிருக்கிறம்''*

*படையினரின் PKLMG அடி இவர்களன் காப்பரண் சுவரை அதிர வைப்பது கயல்விழியின் தொலைத்தொடர்புக் கருவியூடே எல்லோருக்கும் கேட்டது. மிக நெருங்கிய படைவீரன் ஒருவன் இவர்கள் வீசிய குண்டு வெடித்து சிங்களத்தில் அலறியதும்*

கேட்டது. அவர்களின் நிலைமை எல்லோருக்கும் விளங்கியது. சாவகச்சேரி நகரை இழக்கக்கூடாது என்ற முடிவில் உறுதியோடு கடைசிவரை முயன்ற கயல்விழியின் குரல் கடைசியாக ஒலித்தது.

“எங்களுக்கு கிட்ட அவன் வந்திட்டான். இனி எங்கட தொடர்பு உங்களுக்கு இருக்காது” காற்று தனது வீரவணக்கத்தை செலுத்தியது.

----

அந்த தந்தையால் நம்ப முடியவில்லை. “எனது மகள் வீரச்சாவா? அதற்குள்ளாகவா? இப்போதுதானே போனாள்? அதற்குள் எப்படி அவள் ஒரு மேஜராக?” அவர் தனது கேள்விகளைக் கேட்டு, அழுது ஆறுவதற்கு அவரது மகளின் வித்துடல் அங்கே வரவில்லை. அவரின் மகளை அறிந்தவர்கள் வந்தார்கள். அவரது மகள் வெளிக்காட்டிய ஆற்றலைச் சொன்னார்கள்.

“என் மகளா? என் மகளா?” என்ற கேள்வி அவரிடம் மட்டுமல்ல. அவரருகிலிருந்த திண்ணை மநாட்டாளர்களிடமும்தான். அவர்களுக்கு எல்லாமே புரிந்தது போலவும் இருந்தது. புரியாததுபோலவும் இருந்தது. கொஞ்சக் காலமாகவே நாட்டில் ஏற்பட்டுவரும் மாற்றங்கள் கேள்விகளுக்கும் ஆச்சரியங்களுக்கும் அப்பாற்பட்டதாகவே இருப்பதை அவர்களும் உணர்ந்துதான் இருந்தார்கள். எப்போது இந்த அனைத்துக்கும் அப்பாற்பட்டவை நிகழத்தொடங்கிள? அங்கயற்கண்ணி காலத்திலிருந்தா? கரும்புலி அங்கயற்கண்ணியின் அம்மா அழுது ஓய்ந்த பின் மகளை நினைத்து ஆச்சரியப்படத்தொடங்கினார்.

“நாப்பத்தைஞ்சு அடி ஆழக்கடலிலை தனியப் போனவளோ? அவ்வளவு ஆழத்தில் நிலம் இருட்டா இருக்குமே? என்னெண்டு போனவள்? என்னோடை இருக்குமட்டும் இரவில வீட்டுக்கு வெளியாலை போறதுக்கு நான் வேணும் அவளுக்கு. அவள்... என்னெண்டு..?”

----

அன்று அங்கிருந்து ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்த திண்ணை மாநாட்டாளர்கள், இப்போது எல்லாம் கடந்த நிலைக்கு, இயல்பு நிலைக்கு வந்துவிட்டிருந்தார்கள். திண்ணையில் கூடியிருந்து கதைத்துக்கொண்டிருந்தவர்களின் கவனம் வீட்டுக்குள் கேட்ட சத்தங்களால் கலைந்தது. நிலத்தில் தடியால் அடிக்கும் ஒலி. ஒருவர் திடுக்கிட்டு எழும்பினார். ஏதேனும் பூச்சி பொட்டோ? இவன் சின்னவன் கண்டுவிட்டு அடிக்கிறனோ? பெரிய பிள்ளை மூலை மேசையில் படிக்கிறாள். பயந்துவிடப் போகிறாள். பாய்ந்தடித்து வீட்டுக்குள் ஓடியவர் திடுக்கிட்டு அலறினார். குறை உயிரில் கிடந்த பாம்பைத் தடியில் தூக்கியபடி மகள் வந்துகொண்டிருந்தாள்.

''மண்ணெண்ணெயை எடுத்து வாங்கோ கொழுத்துவம்'' என்றாள்.

# உள்ளே எரியும் தீ

***-அம்புலி*** *(''வழி'' சிறுகதைத் தொகுப்பு, கப்டன் வானதி பதிப்பகம், வி.பு மகளிர் பிரிவு, 2005)*

*குறிப்பு*

*1995 பிற்பகுதியில், யாழ் தீவகத்தை விடுதலைப்புலிகளிடமிருந்து கைப்பற்ற சிறீலங்கா இராணுவம் 'சூரியக்கதிர்' என்று பெயர் சூட்டப்பட்ட ஒரு இராணுவ நடவடிக்கையை முன்னெடுத்தது. இக்கதையில் வரும் போர்க்களங்கள் இக்காலத்தில் இடம்பெற்றவை. இதில் விடுதலைப்புலிகள் யாழ் தீவகத்தின் தென்-மேற்குப் பகுதிகளை கொஞ்சம் கொஞ்சமாக இழந்தது சொல்லப்படுகிறது.*

***

டொம், டொம், டொமார்...
தொடர்ந்து எறிகணைகள் வந்து விழுந்துகொண்டிருந்தன. 81மி.மீ, 83மி.மீ, ஆட்டி என்று படையினர் வகை தொகையாய்ப் பீரங்கிகளை நிலைப்படுத்தி செறிவான சூடுகளைப் புலிகள் பக்கம் திருப்பியிருந்தனர்.

'செல்' குத்தும் ஓசைக்குத் தலையைப் பதித்து பதுங்குகுழிக்குள் காப்பெடுத்தாள் நீலா. தொடர்ச்சியாக வந்தவையெல்லாம் அவளைக் கடந்தும், பக்கத்திலும் முன்னாலும் விழுந்து செம்பாட்டு மண்ணை கிளறி எறிந்துகொண்டிருந்தன. மழைக்குச் சேறாகிப்போன காப்பகழிக்குள் வாழையிலைகளைப் போட்டு அதற்குள் ஏறியிருந்தபடி சூழலை அவதானித்துக்கொண்டிருந்தது அந்தக் காவும் குழு அணி.

''கவனம் எல்லாரும் றெஞ்சுக்குள்ள இருங்கோ. ஒருத்தரும் தலையை வெளியில காட்ட வேண்டாம்''

சோபனா ஓடி ஓடி எல்லோரும் பத்திரமாக இருப்பதைப் பார்த்துவிட்டு தானும் காப்பகழிக்குள் நின்று வோக்கியில் வரும் தொடர்பை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள்.

மூன்று நாட்களுக்கு முன் உரும்பிராய் நோக்கி முன்னேறி வந்த படையினரை மறித்து செய்த முறியடிப்புச் சண்டைக்குப் பின்பு அணிகளில் ஏற்பட்ட இடைவெளியை நிரப்ப நீலாவும், கலையும் இன்னும் பத்துப்பேரும் அந்த இடத்திற்கு வந்திருந்தனர். நீண்ட நாட்கள் வேறு பிரிவுகளில் நின்றதால் சண்டைக்குரிய அணிகளில் காவும் குழுவில் அவர்கள் விடப்பட்டிருந்தனர்.

வந்து மூன்று நாட்களில் நல்ல சண்டை முட்டியது. அந்தச் சண்டைப் படைகள்தான் இப்போது எறிகணைகளை சரமாரியாக வீசிக்கொண்டிருந்தன.

‘‘ஏய் தலையைப் பதி’’

நீலா கலைக்குப் பேசிவிட்டுத் திரும்ப இவர்களுக்குப் பக்கத்தில் எறிகணை ஒன்று வந்து விழுந்தது.

‘‘நல்லவேளை வெடிக்கேல்லை. இல்லையெண்டா நீ அல்லது நான்தான்.’’

கலை சிரித்துக்கொண்டாள். சோபானாவின் வோக்கி இரையத் தொடங்கியது.

‘‘ரெண்டு பேர் ரமணியின் பொயின்ரடிக்கு ஸ்ரெச்சரோட ஓடுங்கோ. கவனம்’’

சோபனா கூற காத்திருந்தவர்கள்போல் கலையும் நீலாவும் காப்பகழியிலிருந்து வெளியேறிப் பாய்ந்து அருகிலிருந்த ஸ்ரெச்சரையும் தூக்கிக்கொண்டு ஒருவர்பின் ஒருவராக இருநூறு மீற்றர் தூரத்திலிருக்கும் ரமணியின் பொயின்ரடிக்கு ஓடிக்கொண்டிருந்தனர்.

கிட்டடியில் ராங்கிகளதும், பவள்களதும் உறுமல் கேட்டுக்கொண்டிருந்தது. வழியெங்கும் எறிகணைகள் விழுந்து வெடித்து மரங்கள் முறிந்து சிதறிக்கிடந்தன. கட்டிடங்களின் கொங்கிறிற்றுச் சிதறல்களும் வழியெங்கும் இறைந்து கிடந்தன. பாதைகளிலும், காணிகளின் வேலிகளை ஏறிக்கடந்தும் ஓடிக்கொண்டிருந்த நீலாவின் 'பாட்டா' செருப்பு செம்பாட்டுச் சேற்றுக்குள்ளால் வர மறுக்கவே அதைக் கழற்றி எறிந்துவிட்டு ஒற்றைக்கால் செருப்புடன் ஓடினாள்.

கால் அந்தக் கலட்டிக்தெருவின் கற்களில் இடறுப்பட்டு, வழியில் முறிந்து கிடக்கும் முள்முருக்கம் முட்களால் கீறப்பட்டு எரிந்தது. ரமணியின் பொயின்ற் மோட்டார் பொயின்ற். மோட்டார் எறிகணைகள் புலிகளின் அணிகளுக்கு ஆதரவுச்சூடுகளைத் தொடர்ந்து வழங்கிக் கொண்டிருப்பதால் இந்த திசையை இனங்கண்டு படையினர் சரியான இலக்குப் பார்த்து எறிகணைகளை குவியப்படுத்தினர். நீலாவும் கலையும் இவ்விடத்திற்கு ஓடிவர, முன்னுக்கிருந்த சண்டையணியிலிருந்து காயக்காரர்களை வேறு காவும் குழு அணியினர் தூக்கிச் சென்று கொண்டிருந்தனர்.

மோட்டார்ப் பொயின்ரில் கோகிலாவின் உடல் சிதைந்து கிடந்தது. தலையிலிருந்து இரத்தம் வடிந்து தலையெங்கும் சிவப்பாகிக் கிடந்தது. இரத்தவாடை குப்பென்று நீலாவின் மூக்கினுள் நுழைந்தது. குனிந்து கோகிலாவின் உடலை சீர்படுத்தினர் கலையும் நீலாவும். வெறுமனே தூக்கிவைக்க முடியாமல் இருந்தது அவளது உடல்.

சண்டைக்குப் போவதற்கான ஆயத்தமாக இடுப்பில் வரிந்து கட்டியிருந்த பச்சை 'பற்றிக்' சாரத்தை அவிழ்த்தாள் நீலா. அதனுள் கோகிலாவின் உடலை சேர்த்துக்கட்டி ஸ்ரெச்சரில் ஏற்றி அரை மைலுக்கு மேல் சென்று வாகனத்துள் ஸ்ரெச்சரை ஏற்றிவிட்டு அங்கிருந்து வேறு ஸ்ரெச்சரை வாங்கி முன்னுக்கு ஓடினர்.

அன்று இன்னும் ஆறேழு காயக்காரர்களை மாறிமாறி அனுப்பிவிட்டு உரிய இடம் செல்ல எத்தனிக்கையில் நிலைகள் பின்னுக்கு நகர்ந்துகொண்டிருந்தன. முன்னரங்க நிலைகள் படையினரால் உடைக்கப்பட்டு, சண்டையிட்டவர்கள் காயப்பட்டும் வீரச்சாவடைந்தும் பின்னுக்கு அனுப்பப்பட, விரல்விட்டு எண்ணக் கூடிய மீதிப்பேர் கட்டளைப் பணியகத்தின் கட்டளைக்கிணங்க அடுத்த நிலைக்கு வந்து நிலையெடுத்தனர். சண்டை செய்த களைப்பும் இழந்தவர்கள் பற்றிய நினைவுகளும் அகலமுன்னர் மண்வெட்டியும் துப்பாக்கியும் அவர்களது பணிக்காய்க் காத்திருந்தன.

காயப்பட்டவர்களைத் தூக்கிச் சென்று கொண்டிருந்தவேளை எறிகணைகள் விழுந்து வெடித்தாலும் நல்லவேளை கலைக்கும் நீலாவுக்கும் காயம்படவில்லை. அவர்களது அணியில் இரண்டு பேர் காயப்பட்டு பின் நகர்த்தப்பட்டனர்.

அன்று விடியற்காலை ஆறு மணிக்குத் தொடங்கிய அமர்க்களம் முடிய பொழுது சாய்ந்துவிட்டிருந்தது. காலையிலிருந்து பச்சைத் தண்ணீர் கூடக் குடிக்க நேரமில்லை. இனி அடுத்த 'செற்றப்' பார்த்து, வருகின்ற சாப்பாடுகளை முன்னிருக்கும் அணிகளுக்குப் பகிர்ந்தளித்து கொடுத்துவிட்டுவர எப்பிடியும் பத்து மணியாகும். இரவென்றாலும் ஓய்வெடுக்க நேரமில்லை. காலெல்லாம் வலித்தது. கீறல்கள்பட்டு காயப்பட்டிருந்தது. இன்று வலி தெரியாது. நாளை கால் தூக்க முடியாது. நீலா நினைத்துக் கொண்டாள். காயப்பட்டவர்களின் காலிலிருந்த ஒரு செருப்பை ஒருவாறு வாங்கிப்போட்டிருந்தாள்.

ராதா பக்கத்திலிருந்த கிணற்றிலிருந்து கானுக்குள் தண்ணீர் அள்ளி வந்தாள். நீலாவும் கலையும் தொண்டைக்குழி நிரம்பும் வரையும் தண்ணீரைக் குடித்தனர். பசி வந்ததாயும் இல்லை. வராததாயும் இல்லை. சாப்பிடவேண்டும் போலவும் இல்லை. இரத்த நெடி மூக்கினுள் இன்னமும் இருந்தது. கைகள் இரண்டிலும் இரத்தம் காய்ந்திருந்தது. உடைகளிலும் திட்டுத்திட்டாக இரத்தம் காய்ந்து கிடந்தது. வானம் நன்றாக இருட்டிவிட்டது.

இரவுக்கான தூரவீச்சு எறிகணைகளை 'சூரியகதிர் ஒன்று' படைகள் ஏவிக்கொண்டிருந்தனர். இரவின் அமைதியைக் கிழித்துக்கொண்டு அவை அவர்களைத் தாண்டி கோண்டாவில் சந்திக்கப்பால் எங்கோ போய் விழுந்து வெடித்துக்கொண்டிருந்தன.

சோபனா எல்லோரையும் ஒன்றாக்கி புதிய நிலைகளில் காப்பகழிகளை வெட்டுவதற்குரிய மண்வெட்டிகளை பிரித்துக் கொடுத்தாள்.

''ம்... இனி இவன் அடுத்த மூவ் எடுக்க இன்னும் நாலஞ்சு நாட்கள் செல்லும். அதுவரைக்கும் வெட்டவேண்டியதுதான்''

கலை சொல்லிக்கொண்டிருந்தாள். இருளின் கனத்த போர்வைக்குக் கீழ் அவர்களின் அணிகள் விழிப்போடு வேலைகளில் ஈடுபட்டுக்கொண்டிருந்தனர்.

அடுத்த நாள் காலை அணிகள் ஒன்றாக்கப்பட்டன. இழக்கப்பட்ட ஆட்தொகை நிரப்பீடு செய்யப்பட்டு புதிதாக குழுக்கள் பிரிக்கப்பட்டன. நீலாவுக்கு புதிய ஒன்பது பேர் கொடுக்கப்பட்டு ஒரு வோக்கியும், துப்பாக்கியும் கொடுக்கப்பட்டன. கலை சண்டை அணிகளோடு ஒருத்தியாக இணைக்கப்பட்டு விட்டாள்.

''ஒருத்தரும் அங்க நிக்கப்போறன் இங்க நிக்கப்போறன் எண்டு கேக்காதேங்கோ. எல்லாரும் சண்டையிலதான் நிக்கிறியள். எல்லாரும் மாறி மாறி சண்டைக்குப் போகலாம். சண்டையில எல்லா வேலையும் சமமானதுதான்.''

வாயை முதலிலேயே அடைக்குமாப்போல பொறுப்பாளர் கதைத்துக்கொண்டிருந்தார்.

நீண்ட காலம் கலையோடு வெளியிலும் முதல் நாள் சண்டையிலும் ஒன்றாயிருந்த நாட்கள் வெவ்வேறாக்கப்பட்டு

*விட்டன. இனி அவளை அடிக்கடி காண முடியாது. விழுந்து வெடிக்கும் எறிகணைப் புகையடங்கும் முன்பே கெக்கட்டமிட்டு சிரிக்க முடியாது. குழுத் தலைவியிடம் பேச்சு வாங்க முடியாது. நீலாவுக்கு மனது குறுகுறுத்தது. புதிய போராளிகளை ஒழுங்காக வழிநடத்த வேண்டிய பொறுப்பும் அவளுக்கு.*

*இனி கலையை உயிரோடு பார்ப்பேனா? மனது வலித்தது. சில வேளை காயப்பட்ட அவளையோ அவளது வித்துடலையோ தூக்கிச் செல்லக்கூடும். காலத்தின் கொடுமையைவிட இந்த நினைவு அவளை அதிகம் அலைக்களித்தது.*

*----*

*அடுத்த நகர்வை முறியடிக்கும் ஆயத்தத்தில் எல்லோரும் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். வானத்தில் அடிக்கடி இரையும் சத்தங்களுக்கேற்ப காப்பெடுத்து பின்னர் ஒன்றாகி வேலை செய்து கொண்டிருந்தனர். அந்தப் பிரதேசத்திற்கான அணிகளைக் காட்டுவதற்கு வழிகாட்டியான கண்ணனின் பின்னே ராஜி, சபரி, நீலாவின் காவும் குழு அணிகள் சென்று கொண்டிருந்தன. நீலாவின் அணி கடைசியில். அதிலும் நீலா கடைசியாகச் சென்று கொண்டிருந்தாள்.*

*''இது ரஞ்சனின் செக்சன் நிக்குமிடம். இந்தப் பத்தைக்கு அங்கால முரளியின்ர''*

*கண்ணன் எல்லோருக்கும் விளக்கிக் கொண்டு சென்று கொண்டிருந்தார்.*

*சண்டையில் ஆண், பெண் என்று எல்லோருக்குமே சாப்பாடு, வெடிமருந்து, காயம், வித்துடல்கள் சுமக்கவேண்டிவரும். இப்போது நிற்கும் போராளிகளில் ஆரார் அடுத்த சண்டை முடிய இருப்பினமோ அவள் நினைத்துக்கொண்டாள். முரளியின் செக்சன் இருக்கும் கடைசிக் காவலரண் அது.*

காப்பரணை வெட்டிக்கொண்டு இருந்தவர்களில் மண்வெட்டியில் மண்ணை அள்ளிப் போட்டுவிட்டு நிமிர்ந்த அவனைப் பார்த்து நிலைகுத்தியது அவளது பார்வை. கால்கள் நகர மறுத்தன. அவனும் அவளையே சிறிது நேரம் இமைக்காமல் பார்த்துவிட அணிகள் நகர்ந்து கொண்டிருந்தன. அவளுக்குமுன் சென்று கொண்டிருந்த யோகா அடுத்த வளவு தாண்டிப் போய்விட்டாள். கதைப்பதற்கு அது நேரமில்லை. கதைக்கவும் அவளால் முடியாது. நாலு காலில் அவளின் குழுவை எட்டிப்பிடித்துவிட்டாள் நீலா. மனம் மட்டும் அவனைச் சுற்றி வந்தது.

'ஹரி' அவன் எப்படி இங்கு வந்தான். வடமராட்சியில் வேறு நிர்வாகத்தில் அல்லவா இவ்வளவு நாளும் நின்றிருந்தான். நீலாவைப்போல் 'சூரியகதிர் ஒன்று' சமர்க்களம் அவனையும் களத்துக்கு அழைத்திருக்க வேண்டும். எப்படியென்றாலும் அவளால் இனி ஒழுங்காகச் சாப்பிடவோ தண்ணீர் அருந்தவோ முடியாது.

அவள் அவனைக் காணாமல் இருந்த நாட்களும், காலமும் இப்போது அதிகரித்து விட்டிருந்தன. முன்பெனில் வீட்டில் ஒரு நாளைக்கு நாலைந்து தடவைகள் அவனைக் காணலாம். பேசலாம். பக்கத்து வீட்டில் வசித்த அவர்களிருவரின் இதயத்தையும் இணைத்து வைத்த காலம் போராட்டக்களத்தில் வெவ்வேறு திசைகளில் அவர்களைப் பிரித்து விட்டிருந்தது. நீலாவின் மனதில் ஏழு வருடங்களாகக் குடியிருக்கும் ஹரி அவளைவிட எட்டு வருடங்கள் மூத்தவன். தொண்ணூறாம் ஆண்டு தனது ஆதரவுப்பணியை முழுமையாக்க அவளிடம் சொல்லிவிட்டே இயக்கத்துக்குப்போக, அவனுக்குப் பின்பு அவனுக்கு மூச்சுக்கூட விடாமல் அவள் பயிற்சிக்குப்போக இடையில் பார்க்காமலும், பேசாமலும், அவனைத் தேடி அவளும் அவளைத் தேடி அவனும் போகாமலும், அவர்களுக்கும் இயக்கத்தின் சுயவிபரக் கோவைக்கும் தெரிந்த கதையாக அது உறைந்திருந்தது.

அவள் ஆகாயக் கடல் வெளியில் காயப்பட்டு விடுமுறையில் போக, அவன் பூவரசங்குளத்தில் பட்ட காயம் மாறி விடுமுறையில் வீடு வந்து போயிருந்தான்.

இனிக்கலையுடன் இவனையும் சிலவேளை தூக்க வேண்டி வரலாம். போராட்டத்தின் இயல்புகளில் ஒன்றாகிவிட்ட சாவும், விழுப்புண்களும் அவளைக் கலங்க வைக்கவில்லை. இருக்கிறானோ? இல்லையோ? அதை அவள் அறிவாளோ இல்லையோ? இந்தச் சங்கதியை அறிய முடியாமல் தவிப்பதுதான் கடினமாக இருந்தது நீலாவுக்கு.

அணிகள் நகர்ந்து சென்று கோண்டாவில் டிப்போச்சந்தியை அடைந்துவிட்டன. அடுத்த 'செற்றப்பை' வெட்டிக்கொண்டு புதிதாகப் பயிற்சி பெற்ற பெண் போராளிகள் நின்றனர்.

----

யாழ்நகரப் பகுதிக்குரிய சண்டை நெருங்கிக் கொண்டிருந்தது. அரியாலைப் பக்கமாக படைகள் மேவி 'ட' வடிவத்தில் நகர்ப்பகுதியில் இருக்கும் புலிகளோடு சண்டையிட்டுக் கொண்டிருந்தன. பலாலிப்பக்கமும், கொழும்புத்துறைப்பக்கமும், அது போதாதென்று மண்டைதீவிலிருந்தும் படையினர் எறிகணைகளை அனுப்பிக்கொண்டிருந்தனர்.

நீலாவின் அணி அந்தப் புளியமரத்துக்குக் கீழ் இருந்தது.

“இப்ப சாப்பாடு சண்டைபிடிக்கிற எங்களுக்கும், காயப்பட்டு மெடிக்சில நிற்கிறவைக்கும் மட்டும்தான்”

சாவித்திரி சாப்பாட்டுச் 'சொப்பிங்' பாக்கை கொடுக்கும்போது சொன்னாள். மரவள்ளி, கரட், வாழைத்தோட்டங்கள் என்று எல்லாவற்றையும் விட்டுவிட்டு, ஒன்றுமில்லாமல் ஓடிய மக்கள் சாப்பாட்டுக்கு அவலப்படும் காட்சி அவள் மனதுள் ஓடியது.

மக்களும் வெளியில் நிற்கும் போராளிகளும் படும் இடப்பெயர்வு அவலத்தை நினைத்துக்கூடப் பார்க்க மறுத்து இதயம்.

''அதைவிட நாங்கள் இங்க நிற்கிறது எவ்வளவோ மேல்.''

'சொப்பிங்' பாக்கிலிருந்த பாணை அரைவாசியாகப் பிய்த்து கோறையாக்கி, இன்னொரு பையிலிருந்த குழம்புக்கறியை அதற்குள் ஊற்றி, பஞ்சுப்பாணை தொட்டுத்தொட்டு சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது உயிர் மீண்டும் வந்து ஒட்டிக்கொண்டது போலிருந்தது.

''ஆகா என்ன சுவையான சாப்பாடு''

இந்த நெருக்குவார சண்டைக்குள்ளும் ஒரு நாளைக்கு ஒரு தடவையென்றாலும் வரும் கஞ்சியோ, பாணோ தேவாமிர்தமாகவே இருந்தது அவர்களுக்கு. பசித்த நாவுக்குத்தான் உணவின் சுவை நன்கு தெரியும். சாப்பிட்டு முடிவதற்கிடையில் கஜனி ஓடி வந்து,

''எல்லோரையும் சென். ஜோன்ஸ் கொலிஜூக்கு லைன்பண்ணி வரட்டாம்''

என்று கூறிவிட்டு ஓடினாள். சாப்பிட்டது பாதி சாப்பிடாதது பாதியாக அவசர அவசரமாக எல்லோரும் தயாராகினார்கள். நீலா எல்லாவற்றையும் சரிபார்த்தாள்.

''தமிழரசி நீ முன்னுக்குவா. வேகமாக ஓடவும் மாட்டாய்''

கட்டையாகவிருந்த குண்டுத் தமிழரசியை முன்னுக்கு விட்டுவிட்டு வரிசையாய் ஓடிச் செல்பவர்களுள் கடைசியாகப் போனாள் நீலா.

பக்கத்து வீதிகளிலிருந்தும் ஆண், பெண் போராளிகள் அந்தப் பாடசாலை மைதானத்துக்கு ஓடிக்கொண்டிருந்தனர்.

*“ஏதோ இறங்கி அடிக்கும் செற்றப் போல கிடக்குது” மனது சொல்லிக்கொண்டது.*

*அந்தப் பாடசாலை வாசலை எட்டிப்பிடிக்க சற்று முன்னர் நீலாவின் அணிக்கு எதிர்த்திசையில் ஓடிக்கொண்டிருந்த ஆண் போராளிகளில் இறுகிய முகம், கட்டம் போட்ட பச்சை சேட், உரும்பிராயில் கண்ட அதே உடை. இது அவன்தான். விழிகள் சந்தித்து இனங்காண்பதற்கிடையில் நகர்ந்துவிட்ட அந்த நொடிப்பொழுதில் அவளுக்கு ஏற்பட்ட ஒரே ஆறுதல் அவன் இன்னும் உயிரோடிருக்கிறான். அவனைப் பார்க்க, பேச முடியாவிட்டாலும் அதுபோதும் அவளுக்கு.*

*எல்லோரும் போய் வாகைமரத்தின் கீழ் வரிசையாக இருந்தனர். பானு அண்ணை, பால்ராஜ் அண்ணை, விதுசா அக்கா எல்லாத் தளபதிகளும் அரியாலையை ஊடறுத்து உள்நுழையும் தாக்குதல் திட்டத்தில் மும்மரமாக இருந்தனர்.*

*இறுக்கத்துடன் மூழ்கத் தொடங்கியது அன்றைய மாலைப்பொழுது.*

---

*அரியாலை ஊடறுத்த தாக்குதல், நாவலர் வீதிச் சண்டையென்று நகர்ப்பகுதியில் நெருக்கமாக நடந்த சண்டைகளில் நீலாவுடன் கூட இருந்தவர்கள் பலர் இல்லை. கலையைப் பிரிந்த நாட்களின்பின் இரண்டொரு தடைவ அவளைப் பார்த்ததற்குப் பின்பு இன்னமும் அவளைக் காணவேயில்லை. கொழும்புத்துறைப்பக்கம் நின்றதாக யாரோ சொன்னார்கள். இன்னமும் அவள் உயிரோடிருப்பது ஏதோ நிறைவாகவிருந்தது.*

*அந்த நடு இரவைப் 'பரா' வெளிச்சம் பகலாக்கிக்கொணடிருந்தது. மண்டைதீவு, கொழும்புத்துறை, யாழ். நகர்ப்பகுதி படையினர்*

மாறி மாறி எல்லாப் படைக்கலங்களையும் பாசையூர் கரையை நோக்கி திருப்பியிருந்தனர்.

இத்துடன் புலிகள் ஒழிந்தார்கள், இல்லையென்றால் கடலுக்குள்போய் விழுந்தார்கள் என்று வானொலியில் புழுக விரும்பும் படைத்தரப்புக்கும் அரசுக்குமெதிராகச் சண்டை பிடித்தவர்கள் குருநகர் ஐந்து மாடிக்குள் பாதுகாப்பாக நின்றுகொண்டிருந்தார்கள். வலிகாமத்தை விட்டுப்போக மனமின்றி இறுகிக்கிடந்தன அவர்கள் மனங்கள். மண்டைதீவுக்காரனின் ஆர்.பீ.ஜீ எறிகணைகள் கரையில் வந்து விழுந்துகொண்டிருந்தது.

கடற்புலியின் இழுவைப்படகுகளில் போராளிகள் ஏற, அவை கிழக்கரியாலைக்கரையில் போராளிகளைத் தரையிறக்கிவிட்டுத் திரும்பி வருவதும் போராளிகளை ஏற்றுவதுமாக இருந்தன.

‘‘மாதங்கியின்ர குறூப் வந்திட்டுதோ? ஏனின்னும் வரெல்ல’’

‘‘பின்னால வந்துகொண்டிருக்கினம்’’

‘‘நீலா கெதியாய் ஓடிப்போய் அந்த குறூப்பை கூட்டிவா’’

பொறுப்பாளர் அவசரப்படுத்தினார். இதுவரை கரைக்கு அணிகளை ஒவ்வொன்றாய் கூட்டி வந்த நீலா ஓடிப்போனாள். இடையில் கஜனியுடன் மாதங்கியின் அணி வந்துகொண்டிருந்தது.

‘‘எல்லாரும் வந்திட்டினம்’’

சரிபார்ப்பு, ஒழுங்கமைப்பு என்று சில நிமிடங்கள் கரைய,

‘‘விசு, உங்கட ஆட்களை ஏத்துங்கோ’’

தளபதியொருவர் கட்டளையிட்டார்.

மகளிர் அணிகள் ஒவ்வொன்றாக ஏற, கடைசிப் படகில் நீலா, பூமகள், விதுசாக்கா இன்னும் சிலர். படையெடுத்து அவர்களுக்குப் பின்னால் வந்த நாய்கூட்டங்களின் ஊளையொலி கரையை நிறைத்தது. மனம் விருப்பமில்லாமல் அந்தக் கரையையும், ஐந்து மாடிக் கட்டடத்தையும் விட்டுப் பிரிந்து கொண்டிருந்தது.

மண்டைதீவுக்காரனின் 'பராக்கள்' நடுவானில் ஒளிர்ந்து அணைந்துகொண்டிருந்தன. எப்பிடியும் கலை முதல் சென்ற ஏதாவது ஒரு படகில் சென்றிருக்க்கூடும். நீலா நினைத்துக் கொண்டாள்.

ஹரி, அவன் எங்கிருப்பான். இன்னும் வலிகாமத்திலா? தென்மராட்சியிலா? இல்லை வானத்திலா? இந்த ஏழு வருட நினைவுகளில் ஒளிந்தும், முகங்காட்டியும், நேரில் சில நிமிடப்பொழுதுகளிலும் காணநேரிட்ட அவன் இருப்பானா?

படகின் ஆட்டத்திற்கு உப்புநீர் முகத்தில் எகிறித்தெறித்தது. எங்காவது ஒரு மூலையில் அவன் உயிருடனிருக்கவேண்டும். மனது நினைத்துக்கொண்டது. நீலா ஒருமுறை கரையை நோக்கித்திரும்பினாள். எறிகணைகள் இன்னமும் கரையில் விழுந்து வெடித்துக்கொண்டிருந்தன. படகுகள் தூரச்சென்று கொண்டிருந்தன. போராளிகளையும், வார்த்தைககளால் செதுக்க முடியாத அவர்களின் உணர்வுகளையும் சுமந்துகொண்டு படகு மற்றைய கரையை நோக்கி விரைந்துகொண்டிருந்தது.

# இடம் மாறியுள்ள துப்பாக்கிகளால்...

***-கஸ்தூரி*** *("கஸ்தூரியின் ஆக்கங்கள்", வெளியீட்டுப்பிரிவு – விடுதலைப்புலிகள், 1992)*

**குறிப்பு**

*தமிழீழத்தில் இந்திய இராணுவம் நிலைகொண்டிருந்த காலப் பகுதியில் இடம்பெற்ற ஒரு உண்மைக்கதை இது. பாக்கியத்தின் மூன்று பிள்ளைகளும் பிற்காலத்தில் விடுதலைப்புலிகள் அமைப்பில் இணைந்து மாவீரர்களானார்கள்.*

*இங்கு குறிப்பிடப்படும் 'தலையாட்டி' எனப்பட்டவர் ஒரு காலத்தில் ஈழத்தமிழரிடையே அதிகமாகப் பேசப்பட்டவர். இந்திய மற்றும் இலங்கை இராணுவத்தால் முகமூடி அணிந்து கொண்டுவரப்பட்டு வரிசையில் நிறுத்தப்பட்ட தமிழ் இளைஞர்களில் விடுதலைப்புலி ஆதரவாளர்களை இனம் காட்டுபவர்களே 'தலையாட்டிகள்'.*

***

கிணற்றடியில் தண்ணீர் அள்ளிக்கொண்டு நின்ற பாக்கியத்திற்கு நாய்கள் குரைத்ததில் மகன் கூப்பிட்டது காதில் விழவில்லை. "யாரோ முகாமிலிருந்து தப்பியோடியிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவ்வளவு நேரத்தோடு வெளிக்கிட்டிருக்கமாட்டாங்கள்..." என்று எண்ணியவள் "அவன் எப்படியாவது தப்பிவிட வேண்டும். பிடிபட்டாலும் உயிரோடு பிடிபடக்கூடாது..."என்று முன்பின் அறிமுகமில்லாத அந்தத் தமிழ் மகனுக்காக மனதிற்குள் ஆண்டவனை வேண்டிக்கொண்டாள்.

"அன்று வாழைக்குலைக் கந்தையற்ற மகனைப் பிடிக்கவும் இப்படித்தான் வேளையோடு வந்து காவலிருந்தவங்கள்.

*வீடுகளில் இருந்தவர்களையும், வீதியால் வந்தவர்களையும், ஏன் நித்திரையில் கிடந்தவர்களையும் தட்டி எழுப்பி விடிஞ்சதும் விடியாததுமா கூட்டிக்கொண்டே பொன்னம்மா வளவுப் புளிக்குக் கீழே இருத்திவச்சவங்கள்...''*

*பதினொரு மணிபோல தலையாட்டிக்கு முன்னால் எல்லோரும் தலைகுனிந்து சென்றனர். ''ஏய்... எல்லாம் இங்க பார்த்து நிமிர்ந்து நட...'' என்று இhணுவத்தினன் கத்த ''எங்கே தலையாட்டிக்கு கோபம் வந்து விடுமோ'' என்ற அச்சத்தில் பரிதாபப் பார்வையை வீசி அந்த அரக்க இதயங்களில் இரக்கத்தை எதிர்பார்த்து நின்ற இளைஞர்கள்.*

*ஆம்! இன்று பெரும்பாலான தமிழ் இளைஞர்களின் தலையெழுத்து தலையாட்டிகளால்தான் திருப்பியெழுதப்படுகிறது. என்னதான் எமது இளைஞர்களுக்கு வீரமிருந்தாலும் முகமூடிகளுக்கு முன்னால் எல்லோரும் முகம் வெளுத்துப் போகிறார்கள்.*

*கிணற்று வாளியை கம்பியிலே கொழுவியவள், தண்ணீர்க் குடத்தை தூக்கிக்கொண்டாள். பக்கத்து வீட்டிலிருந்து கோழிகள் பதறியடித்துக் கொக்கரித்தபடி ஓடிவந்தன. இந்தியாவிலிருந்து இங்கே வந்து கோழிகளைத் துரத்தித்திரியும் கும்பலை எண்ண மனம் வெதும்பியது. குசினிக்குள் போக நினைத்தவள்... ஒருகணம் தயங்கி குடத்தை வெளியிலே வைத்துவிட்டுக் கோடிப்புறத்தால் விறாந்தைக்கு வந்தாள். வந்தவள் திடுக்குற்று பின்வாங்கி எதிர்பாராத தாக்குதலில் இருந்து தப்ப சுவரோடு ஒண்டிக்கொண்டாள்.*

*சின்னயற்ற வாழக்கே நின்ற சிவத்த கேப்பைமாடு இராணுவத்தினரைக் கண்டு அறுத்திருக்கவேண்டும். வேலியைப் பிச்சுக்கொண்டு வந்த வேகத்தில் இவளுடன் மோதப் பார்த்து, கால்கள் சறுக்க, ஒரு துள்ளுத் துள்ளி மறுபக்கம் பார்த்து நின்றது.*

*பெரிய உருவம், பெரிய கண்கள். ஆனால் அதன் பார்வை பரிதாபத்தை வேண்டிநின்றது. மனிதர்களைவிட அதிக ஆபத்தை தான் எதிர்நோக்குவது போல் மிரண்டுபோய் நின்றது.*

*விரட்ட நினைத்தவள் மாடு தானாகவே வெளியே போகட்டும் என எண்ணி படலையைத் திறந்துவிடப் போனாள். படலையை முற்றாக திறந்திருக்க மாட்டாள். அதற்குள் மீண்டும் மிரண்டு ஓடிவந்த மாடு படலையையே பிரித்துவிடுவது போல் அவளையும் மோதி வீழ்த்தி, எதிர்வளவினுள் புகுந்து ஓடியது.*

*'சனியன்' எனத் திட்டியபடி நிமிர்ந்தவள், மாடு தன்னையும் மோதி வீழ்த்திவிட்டு ஓடிய காரணத்தைப் புரிந்துகொண்டாள். அங்கே... தலைப்பாகை அணிந்த, உயரமான ஒரு இராணுவத்தினன் ஒரு கையில் துப்பாக்கியும், மறுகையில் கோழியுமாக இவளையே பார்த்துப் பல்லை இழித்தபடி வந்துகொண்டிருந்தான். இதயம் படபடவென அடித்துக்கொண்டது. பார்வையை வாசல் பக்கம் திருப்பினாள். திருப்பியவள் சிலையாகிவிட்டாள்... அங்கே....*

*அவளது மூத்த மகனை முன்னேவிட்டு இரண்டு இராணுவத்தினர், பின்னால் வந்துகொண்டிருந்தனர். ‘‘கடவுளே... இவ்வளவு நேரமும் உள்ளுக்குள்ளேயே இருந்தவங்கள்... என்னத்தை எடுத்தாங்களோ தெரியாது...’’ மனம் பதைத்தவள், வீட்டின் மேசையிலும் மூலை முடுக்குகளிலும் கிடந்த பொருட்களை நினைவுபடுத்திக் கொண்டாள். எங்கோ ஏதோ தவறுதலாகக் கிடந்து தனக்கு ஆபத்தை உண்டுபண்ணப் போவதாக பிரமைப்பட்டாள்.*

*கடந்த இரவு பதினொரு மணி இருக்கும் அவர்கள் வரும்போது.... துண்டறிக்கைகள், பத்திரிகையிலிருந்து வெட்டியெடுக்கப்பட்ட அநேக துண்டுச் செய்திகள், புத்தகங்கள், இன்னும் ஏதேதோ.... தூக்குவதற்கு சுமையாக இருந்திருக்க வேண்டும். அவர்கள் தூக்கிவருவதைப் பார்த்துக் கணித்துக் கொண்டாள். அவற்றைப்பற்றி அவள் எதுவும் கேட்கவில்லை. ஆபத்தான*

சூழ்நிலைதான். ஆனாலும் அடிக்கடி அந்த வீட்டில் இரவுகள் இப்படித்தான் கழியும்.

அவர்களின் வருகையை முன்கூட்டியே தெரிந்திருந்த படியால் அவளுக்கு உணவு தயாரிக்க வேண்டிய பிரச்சனை இருக்கவில்லை. அன்றிரவு இட்டலி அவித்திருந்தாள். வழமையாக அவள் இட்டலி அவிப்பது குறைவு. கணவன் இருக்கும் போது மனதிற்குப் பிடித்ததோ பிடிக்காததோ அவனது தொல்லை பொறுக்கமுடியாமல் அவனுக்குப் பிடித்தவற்றை செய்து கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம். குடித்துவிட்டு வந்து அவன் செய்யும் கும்மாளம்... இவர்களின் குடும்பச் சண்டைக்கு குழந்தைகளின் எதிர்காலம் பலியாவதை எண்ணி அவள் பட்ட வேதனை... வீட்டிலிருந்து அவள் வெளியே போனாலென்ன அல்லது அவளைச் சந்திக்க யாராவது வீட்டிற்கு வந்தாலென்ன அது எப்படியாவது அவனுக்குத் தெரிந்து விடும்.

அவன் பிரிந்துபோய் வாழ்வதற்கு இந்தப்பிரச்சனைகளைத் தான் பயன் படுத்திக் கொண்டான். கணவன் இல்லாவிட்டாலும் அவள் இப்போது நிம்மதியாகத்தான் வாழ்கிறாள்.

மரவள்ளித் தோட்டங்களிலும், வாழைப் பாத்திகளிலும் இரவுகளைக் கழித்து, பாணையும் ரொட்டியையுமே பழக்கப்படுத்திக்கொண்ட அந்த இளைஞர்களுக்கு இட்டலி அவித்துக் கொடுப்பதில் பரம திருப்தி அவளுக்கு.

வேலையை முடித்து அவர்கள் புறப்பட்ட போது மூன்று மணியாகி விட்டிருந்தது. அவதானமாக எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டுதான் போனார்கள். அவளும் கூடவே உதவி செய்தாள். பார்த்துப் பொறுக்கி ஒன்றும்விடாமல் கட்டிக் கொடுத்தாள். ஆனாலும் சந்தர்ப்ப சூழ்நிலை சந்தேகத்தை உண்டுபண்ணி அவளைச் சஞ்சலப்படுத்தியது.

அவள் இடிந்துபோன அளவிற்கு அங்கு ஒன்றுமே நடக்கவில்லை. பிள்ளைகள் மூவரும் ஓடிவந்து தாயைச் சுற்றிக்கொண்டார்கள்.

*வந்தவர்களில் ஒருவன் பிள்ளைகளைச் சுட்டிக்காட்டி "உன்னுடைய பிள்ளைகளா...?" என்று கேட்டான். பின்னர் ஏதோ புரியாத மொழியில் கூறியவன், சிரித்தபடி மற்றைய இராணுவத்தினரையும் அழைத்துக்கொண்டு சென்றுவிட்டான்.*

*நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு பொழுதும் துன்பத்தையே சுமந்து வந்தது. தொடர்ந்து சில நாட்களாக நேர அட்டவணைப்படி அடிக்கப்படும் 'செல்'... அதில் எதுவித மாற்றமுமில்லை. செல்லடிப்பதும், சிரசுகள் வீழ்வதும் சிறு நிகழ்வுகளாகிவிட்டன. யாழ். போதனா வைத்தியசாலை, சாவகச்சேரி சந்தை இவை பாரிய இழப்புகள்தான்... ஆயினும் ஆங்காங்கு கிராமங்களில், நகரப்புறங்களில் நடந்தவை கொஞ்சநஞ்சமா...?*

*"சமாதானத்தை நிலைநாட்ட ஒரேவழி சண்டை. இது இன்றைய உலகம் எடுத்துக்கொண்ட இறுதி முடிவு. கொலை புரிவதே இவர்களுக்குக் கொள்கையாகிவிட்டது. வீதிகளில் மனிதர்களைக் காணமுடிவதில்லை. எங்கு பார்த்தாலும் எலும்புத் துண்டங்களையும், மண்டையோடுகளையும் மணந்து திரியும் இராணுவ மனிதர்கள். தூணிலும் துரும்பிலும் இந்தத் துப்பாக்கி மனிதர்கள்தான் உட்கார்ந்திருக்கிறார்கள்."*

*மூன்று வேளையும் உணவு உண்ணும் பழக்கத்தை மக்கள் மறந்துவிட்டார்கள். கடைகளில் பொருட்கள் இல்லை. எங்காவது தொலைவிலிருந்து வந்தாலும் யானை விலை, குதிரை விலை. பணக்காரரர்கள் பதுக்கி வைத்த பணத்தைப் பாவித்துக் கொண்டார்கள். ஏழைகள் இரைப்பைகளைச் சுருக்கி பட்டினிக்கு பலியாகிக் கொண்டிருந்தார்கள்.*

*இத்தனை ஆபத்துக்களுக்கும் துன்பங்களுக்கும் மத்தியிலும்... நாட்டிற்காகப் போராடும் அந்த நல்ல உள்ளங்களுக்கு... அந்தப் பாவியின் இதயம்தான் ஏங்கியது.*

*அன்று மத்தியானம் உணவு எடுக்க வருவதாகக் கூறியிருந்தான் அன்சார்.*

*அதற்காகவே அவள் நேரத்தோடு சமைக்க தொடங்கியிருந்தாள். முன்பெல்லாம் உணவு கொடுக்கவும் உதவி செய்யவும் ஊரில் எத்தனை பேர்? அஞ்சலிக் கூட்டங்களையும், பிரச்சார மேடைகளையும் தங்கள் தங்கள் தகுதிகளைக்காட்டத் தருணமாக்கிக் கொண்டவர்கள் எத்தனை பேர்?*

*இத்தகைய மனிதர்களை இனங்காண்பதற்காகவாவது நாட்டின் சூழ்நிலை மாறுபட வேண்டும் என எண்ணியவள், நாய் குரைக்கும் ஒலி கேட்டு வெளியே வந்தாள்.*

*அன்சார் உணவு எடுப்பதற்காக வந்திருந்தான்.*

*அவனைப் பார்ப்பதற்கே பரிதாபமாக இருந்தது. நன்றாக இளைத்திருந்தான். "அவனுக்கும் அப்பா... அம்மா... சகோதரம்... வீடு எல்லாம் உண்டு. அவர்களோடு உல்லாசமாய்ப் பொழுதைப் போக்கலாம்தானே... பிறகேன் இப்படி ஊண் இன்றி, உறக்கம் இன்றி சாவைக் கையில் பிடித்தபடி சமூகத்தில் இவர்கள் நடைபயில வேண்டும்?"*

*அன்சாருக்கு உணவைக் கொடுத்துவிட்டு அவசர அவசரமாகப் பார்சல்களைக் கட்டினாள்.*

*உணவு கட்டிக்கொண்டிருந்தவளுக்கு பசியோடும் நோயோடும் போராடியபடி, பனியிலும் மழையிலும் நனைந்து நாட்டுக்காகப் போராடிக்கொண்டிருக்கும் அந்த மெலிந்த... வாடிய... உருவங்களே கண்களில் நின்றன. "ஊருக்குள்ள இப்ப ஒருத்துரும் பொடியள வீடு வாசல்ல அடுக்கிறேல்ல. பிறகு நீ என்ன இழவுக்கு உவங்களைக் கூப்பிட்டு சாப்பாடு குடுக்கிறாய்?... உங்கை சாப்பாடு குடுத்தவையளுக்கு என்ன நடந்தெண்டு தெரியும்தானே...?" இப்படித்தான் அன்று இராசாத்தி அக்கா தோட்டத்தில் அவளைக் கண்டித்தாள்.*

*“நாட்டில என்ன பிரச்சனை நடக்குது. அதுக்கு என்ன செய்யலாம் எண்டு சிந்திக்காதேங்கோ...! பக்கத்து வீட்ட ஆர் பாசல் எடுக்கவந்தவன் எண்டுதான் ஆராய்ச்சி நடத்துங்கோ...!” இப்படிச் சொல்ல நினைத்தவள் தன்னைக் கட்டுப்படுத்திச் சிரித்துவிட்டு, “இப்ப ஆர் அக்கா சாப்பாடு குடுக்கிறது? ஒழுங்கைக்கால போகேக்க பழகின முகம் கண்டால் என்ன ஓடி ஒளிக்கிறதே...? தண்ணிய வென்னிய குடுத்துச் சமாளிக்கிறதுதானே” என்று சமாளித்தாள்.*

*இப்ப அன்சர் வந்திருக்கிறதைக் கண்டால் மனிசி தானே நேரே போய் ஆமிக்கு அறிவிச்சாலும் அறிவிக்கும். இப்படி எண்ணிக்கொண்டவளுக்கு திடீரென்று ஒரு தவிப்புணர்வு. “தற்செயலா இந்தச் சாப்பாடு பிள்ளையளைப் போய்ச் சேராட்டி...? கடவுளே...! அப்படி நடக்கக்கூடாது!. அதுகள் சாப்பிட்டு எத்தனை நாளோ...! சாப்பாடு வரும் வரும் எண்டு எத்தனை ஆவலோட இருக்குங்கள்...” பார்சல்களை ஒவ்வொன்றாய் பெட்டியில் அடுக்கினாள்.*

*திடீரென்று நாய்கள் குலைக்கும் ஓசை கேட்டது. “கடவுளே! வந்திட்டாங்களோ தெரியாது...” அச்சமடைந்தவளுக்கு நாய்கள் தொடர்ந்தும் குரைக்கவே இதயம் இன்னும் வேகமாக அடித்துக் கொண்டது. “எல்லாமே துலைஞ்சுது” என்றவள் ஒழுங்கையில் சென்று பார்ப்பதற்காக வெளியே ஓடி வந்தாள்.*

*உயரமான ஒரு இராணுவத்தினன் தலைப்பாகை அணிந்திருந்தான். படலைக்கு மேலால் எட்டிப்பார்த்தவன் அவளைக் கண்டதும் ஆவேசத்துடன் பலமாக ஏதோ கத்தினான். இன்னொருவன் கட்டையாக இருக்கவேண்டும், படலைக்கு கீழால் இவளையே முழிச்சு முழிச்சு வெறித்துப் பார்த்தான்.*

*அவளுக்குத் தனது நிலை விளங்கி விட்டது.*

*“கடவுளே...! அன்சாரைப் பிடிக்கப்போகிறாங்களே இப்ப என்ன செய்யிறது...?” செய்வதறியாது தவித்தாள்.*

*முன்பக்கத்தால் போகமுடியாது. நிற்பதும் இருப்பதுமாக முழத்துக்கு ஒரு இராணுவம். ஆனால் இன்னும் ஒருவனும் அவளின் வளவுக்குள் வரவில்லை.*

*“ஒரு வேளை வேறு எதுக்காவது வந்தாங்களோ...? சீ... இருக்காது. அன்சாரை கிணற்றடி வேலியாலை ஓடச்சொல்லுவம். அங்காலை மரவள்ளிக்கை போனானெண்டா ஓடித்தப்பிடுவான்.”*

*இப்படி நினைத்தவள் இராணுவம் நிற்கிறதா என்ற பார்க்கப் பின்புறம் ஓடினாள். அங்கே... அன்சாரும் பாய்ந்தோட வந்தவன் இராணுவம் நிற்கிறதா என்று பார்த்துக் கொண்டிருந்தான்.*

*“பின்புறம் இராணுவம் எதுவும் இன்னும் வரவில்லை.” இப்படித்தான் அவள் நினைத்தாள். அன்சாரும் அங்கே ஒரு இராணுவத்தினனையும் காணவில்லை. “தம்பி...! ஒருத்தனும் இல்லை ஓடு ராசா...” இப்படிச் சொன்னவள் அவன் வெளியேறும் வரை காத்திராது குசினிக்குள் ஓடிவந்து, சாப்பாட்டுப் பார்சலை இழுத்து அடுப்புப் புகட்டுக்குக் கீழ் கவிட்டுக் கொட்டினாள். விறகுகளை இழுத்து மேலே போட்டாள்.*

*“டுமீல்...டுமீல்”*

*சடசடவென்று துப்பாக்கி வெடித்தது.*

*அன்சாரிடம் துப்பாக்கியில்லை... அப்படியானால்...? “ஐயோ...!” என்று கத்தியவள் கிணற்றடிப்பக்கம் ஓடினாள்.... அங்கே... அவள் கண்ட காட்சி...*

*அன்சார் இரத்தம் பாய மண்ணில் வீழ்ந்து கிடந்தான். உயிர் இன்னமும் பிரியவில்லை... உடல் துடித்துக்கொண்டிருந்தது.*

*"ஐயோ... தம்பி... நீ செத்துக்கொண்டிருக்கிறியே... நான் என்ன செய்ய...?" அவளது உள் மனம் ஒப்பாரி வைத்தது.*

*அவள் கண்முன்னாலேயே... அந்த உயிர்... மெல்ல மெல்ல அடங்கி... ஜடமாகிவிட்டது.*

*"அன்சார்! இனி வரமாட்டான்... சோறு தாங்கோ என்று என்று கேட்கமாட்டான்... ஏன் உண்ணவே மாட்டான். விடுதலை கேட்டதற்காக இந்த இளம் உள்ளங்கள் வீதியோரங்களிலும், வேலிக்கரைகளிலும் இப்படியா வீழ்ந்து மடிய வேண்டும்...?" ஒரு கணம் சிந்தித்துப் பார்க்கிறாள். சூழலிலுள்ள ஆபத்தை மறந்து விட்டு வாய்விட்டு அழுதுவிட்டாள்.*

*இதுவரைக்கும் இந்த நிகழ்வுக்காகவே காத்திருந்த வெறி கொண்ட இராணுவக் கும்பல், பாய்ந்து வந்து அவளைச் சுற்றிக்கொண்டது. மூர்க்கத்தனமாகத் தாக்கி கீழே தள்ளியது. மண்டை பிளந்து கன்னம் வழியே இரத்தம் வழிந்து கொண்டிருந்தது.*

*இதுவரைக்கும் அச்சத்தால் ஒடுங்கி குரல் அடைத்துப்போய் நின்றிருந்த அவளது குழந்தைகள், முதற் தடவையாக அவளது நிலையைப் பார்த்து வீரிட்டுக் கத்தத் தொடங்கினார்கள்.*

*குழந்தைகள் அழுவதைக்கண்டு ஆத்திரமடைந்த ஒரு இராணுவத்தினன் புரியாத பாசையில் பலமாக உறுமிக் கத்தியபடி அவர்களை நெருங்கினான். கையிலே கிடந்த தடி முறியும்வரை குழந்தைகளைத் தாக்கினான். மூத்த மகனைச் சப்பாத்துக் காலால் உதைத்துக் கீழே தள்ளினான்.*

*வாழ்நாளில் இத்தகைய ஒரு வேதனையை அனுபவித்திருக்க முடியாத அவளது கடைசிக் குழந்தை... அலறித்துடித்து... தாயை நோக்கி ஓடியது. அஞ்சி ஒடுங்கி அலறித்துடித்து வரும் அக்குழந்தையை அணைத்துக்கொள்ள முடியாத அந்த அபலையின் வாய் மட்டும் ஏதோ முணுமுணுத்தது. ஆமாம்*

*அரவணைக்க முடியாதபடி அவளின் கைகள் இரண்டையும் சேர்த்துப் பின்புறமாகக் கட்டியிருந்தார்கள்.*

*அவள் இதயத்திலிருந்து எழுந்த இரத்தம் கண்களிலிருந்து தாரை தாரையாக வடிந்துகொண்டிருந்தது. குழந்தை அவளின் கழுத்தைக் கட்டிக்கொண்டது.... வலிக்கும் இடங்களைக் காட்டி 'அம்மா... அம்மா' என்று அழுதது.*

*இதயம் சுக்கு நூறாகி உதடுகள் துடிக்க... குழந்தையின் கன்னத்தில் முத்தமிட்டாள். மகனை அருகே வரும்படி தலையை ஆட்டினாள். ஆனால் அவனால் எழுந்திருக்கவே முடியவில்லை. விக்கி விக்கி அழுதுகொண்டிருந்தான். இவற்றையெல்லாம் அங்கீகரிக்காத அந்த கயவர்கள்... குழந்தையை இழுத்து அப்பால் வீசிவிட்டு, அவளை இழுத்து ஜீப்பிலே ஏற்றினார்கள்.*

*குழந்தைகள் கதறி அழுதார்கள். அவர்களை அணைத்துக்கொள்வதற்கு அன்று பாக்கியத்தின் தாய்கூட வீட்டில் இல்லை. வேடனின் அம்புக்கிலக்காகி குற்றுயிராய் வீழ்ந்து கிடக்கும் தாய்ப்பறவையை அவன் எடுத்துச் செல்லும்போது... தாயே உலகம் என்றிருந்த அதன் குஞ்சுகள்... தாய் படும் வேதனையை தாங்க முடியாமலும், விரிந்து பரந்த உலகத்திலே தாம் தனித்து விடப்பட்ட அவல நிலையைச் சொல்லமுடியாமலும்... அச்சத்தினால் அவலக்குரல் எழுப்புவது போல் இருந்தது அந்தக் குழந்தைகளின் கதறல்.*

*அலறித்துடிக்கும் குழந்தைகளை அநாதைகளாக்கிவிட்டுத் தவித்துப் புலம்பும் தாயைமட்டும் தனியே எடுத்துச் சென்றது அந்தக் கயவர் கூட்டம். இந்த உலகத்தை நான் இனிப் பார்க்க முடியாது... எனது குழந்தைகள்... அவர்கள் இனி அநாதைகளா...? துடித்துப் போனாள். உயிரோடு தணலிட்டது போல் தவித்தாள்...*

*பாக்கியத்தின் பார்வையிலிருந்து குழந்தைகள் மறைந்துவிட்டனர். "போகட்டும்... இன்று எத்தனை தமிழ்க் குழந்தைகள் அநாதைகளாகிவிட்டனர். அவர்களோடு இவர்களும்*

சேர்ந்து கொள்ளட்டும். அடிமைகளாக வாழ்கின்றவரை நாட்டில் அகதிகளும், அநாதைகளும் தானே நிரம்பி வழிவார்கள்.'' இப்படி நினைத்தவளுக்குத் திடீரென்று ஒரு தவிப்பு... ஆசை... ''இப்போதே இந்த நிமிடமே சுதந்திர நாடு கிடைத்துவிட்டால்...? ஏன்... கிடைக்காமலா போகப்போகிறது? நிச்சயம், இன்றில்லாவிட்டாலும் என்றோ ஒருநாள் சுதந்திர நாடு உருவாகத்தான் போகிறது. எமது குழந்தைகள் சுதந்திரமாக வாழத்தான் போகிறார்கள். அதுவரைக்கும் அவர்கள் அநாதைகளாகவே வாழட்டும்...''. வரப்போகும் பயங்கரங்களைச் சந்திக்க மனதைத் திடப்படுத்திக் கொண்டாள். இராணுவத்தினரின் முட்டல்கள், முறைப்புக்கள்... அதட்டல்கள்.... ஏளனங்கள்... அவள் அவற்றைப் பொருட்படுத்தவில்லை. ஜீப் இயல்பாக ஓடிக் கொண்டிருந்தது.

நாட்கள் கூடி வாரங்களாய்... வாரங்கள் மாதங்களாய்... உருண்டோடின. அந்த ஊரில் பாக்கித்தைப்பற்றி கதைகள் சிறிது சிறிதாக அடங்கிக்கொண்டிருந்தன. வந்து போனவர்களும், வருத்தப்பட்டவர்களும் வருவதைக் குறைத்துக் கொண்டார்கள்.

''அவளுக்கு எத்தினை தரம் சொன்னனான். ஒரு மனிசர்... நாலு விசயம் தெரிஞ்சவை சொன்னாக் கேக்கவேணும் கண்டியோ... தன்ரை இஸ்டத்துக்கு நடக்க வெளிக்கிட்டா உப்பிடித்தான் நடக்கும்.''

''ஓமோம் நாட்டிலை நடப்பிலை என்ன நடக்குதெண்டு தெரிஞ்சு கொண்டுதான் ஒரு விசயத்திலை இறங்கவேணும்...''

''உனக்குத் தெரியும்தானே சாப்பாடு குடுக்கிறவையளை உவங்கள் கொண்டு போறாங்கள் எண்டு... இப்ப நீ போய் அங்க இருக்கிறாய்... இஞ்ச குழந்தைகளின்ரபாடு ஆர் பாக்கிறது...?''

''ஓமோம் அந்த பேத்திக் கிழவிதான் பெரிய கறுமம்.''

"ஏன் அந்த மனிசிக்கென்ன குத்துவலியே... கட்டேலைபோற காலத்திலை கஞ்சித்தண்ணியைக் குடிச்சுப்போட்டு எங்கையும் ஒதுங்கிக் கிடக்கிறதை விட்டுட்டு அந்த மூண்டோடையும் கிடந்து மாரரடிக்க...?" ஆரம்ப நாட்களில் அடித்துப் புரட்டியவர்கள் இப்போது தங்கள் குற்றச்சாட்டுகளைக் குறைத்துக் கொண்டு விட்டனர்.

இராணுவம் மட்டும் அடிக்கடி வந்து அந்தக் குழந்தைகளை அடித்துத் துன்புறுத்திவிட்டுச் செல்லும். செல்லடிகளின் போதும் துப்பாக்கிச் சூடுகளின் போதும் அஞ்சியொளியும் அக்குழந்தைகளை அணைத்துக்கொள்ள அன்னையின் இடத்தை ஆர் நிரப்புவார்...?

ஊர்ப் பெரியவர்கள் முதல் உறவினர்கள் வரை பாக்கியத்தை விடுதலை செய்ய எடுத்த முயற்சிகள் எதுவுமே பலனளிக்கவில்லை. பாக்கியத்தின் தாய் இடையிடையே குழந்தைகளைக் கூட்டிப்போய் முகாமிலிருக்கும் தாயைக் காட்டி வந்தாள். கண்டவுடன் அவர்கள் கொள்ளும் களிப்பும்... பிரிந்து வரும்போது படும் வேதனையும்... அழுது குழறி கடைசிக் குழந்தை தாயைப் பிரிந்துவர மறுத்துவிடும்.

"அம்மா... உனக்கு என்னிலை ஆத்திரமிருக்கலாம்... அதுகள் சின்னனுகள், ஏதும் பிழைவிட்டாலும் அடிச்சுப் போடாதை... நீயும் அடிச்சால் அதுகள் ஆருட்டைப் போகுங்கள்...?" குழந்தைகளை கவனமாய் வளர்க்கும்படி தாயிடம் மன்றாடுவாள்.

தினசரி வீட்டில் அந்தக் குழந்தைகள் தாயைப்பற்றிக் கதைத்துக் கொண்டே இருப்பார்கள். இராணுவம் வந்ததையும், தம்மையும் தாயையும் தாக்கியதையும், பின்னர் தாயை ஜீப்பில் ஏற்றிச் சென்றதையும் நினைத்து அழுவார்கள். ஆயினும் தாய் இல்லாமலே காலத்தை ஓட்ட அந்தக் குழந்தைகள் கற்றுக் கொண்டு விட்டார்கள்.

எதிர்பாராத விதமாகப் பாக்கியம் ஒருநாள் விடுதலை செய்யப்பட்டு வீடு வந்தாள். தாய்ப்பாசத்திற்காகவே ஏங்கிக்கொண்டிருந்த அவளது குழந்தைகள் தாயைக் கண்டதும் தாவி ஓடிச்சென்று தழுவிக்கொண்டன. பாக்கியம் ஆவல் பொங்க அவர்களை அணைத்து முத்தமிட்டாள். குழந்தைகளும் பாக்கியமும் கொஞ்சிக் குலாவுவதைக் கண்ட அவளது தாய் கடந்த கால வேதனைகளையும் அவளது வாழ்க்கையையும் எண்ணிக் கண்ணீர் விட்டாள்.

அந்தக் கயவர்கள் மத்தியில் பாக்கியம் பட்ட வேதனைகள்... சொல்லித் துயராறக் கூடியவையா அவை...? அவள் அனுபவித்த வேதனைகளை விடவும் அங்கே அடைபட்டிருக்கும் இளைஞர்களுக்கு நடைபெறும் சித்திரவதைகளும்... அவர்களின் அலறல் ஒலியுமே அவளை வெகுவாக வேதனைப்படுத்தியது.

அவள் கண்முன்னாலேயே எத்தனை இளைஞர்கள் தலைகீழாகத் தொங்கியபடி அடிவாங்கினார்கள். கும்பிட்டு மன்றாடி குழறியவர்கள், மண்டை பிளந்து... இரத்தம் வழியும்... அதனாலென்ன, மயங்கிவிழும்வரை அந்த மடையர்கள் தாக்குவதை நிறுத்தமாட்டார்கள்.

இரவின் அமைதியைக் குலைத்தபடி எழுந்துவரும் ஐயோ... அம்மா... அம்மா... என்ற அலறல்கள்... இதயத்தையே பிளக்கவைக்கும் அந்தக் கதறல்கள்... அடியின் அகோரத்தால் சிறிது சிறிதாகக் குறைந்து... முனகலாக கேட்கும். எத்தனையோ இரவுகள் எழுந்து அழுதிருப்பாள். அப்போதெல்லாம் அந்த இளைஞர்களின் உயிர் பிரிந்துவிட வேண்டும் என்றுதான் அவள் பிரார்த்திப்பாளே தவிர வேறொன்றும் செய்ய மாட்டாள். சிறிது நேரம் யோசித்துவிட்டு படுத்துக் கொள்வாள். திடுக்குற்று விழித்துக் கொண்டால் மீண்டும் அறைச் சுவர்களையும் ஊடுருவி... அவளிதயத்தைத் துளைத்துத் துகள்களாக்கும் அதே அலறல்கள்... அதே முனகல்கள்...

விடுதலையாகி வந்தவள் ஊருக்குப் பயந்து வீட்டோடு முடங்கிப்போகவில்லை. போராளிகளுக்கு உணவு கொடுப்பது முதல் பலதரப்பட்ட வேலைகளையும் முன்னர்போலவே மறைமுகமாக செய்து வந்தாள். "எனக்குச் சரியெனப்பட்டதை நாட்டு விடுதலைக்காக நான் செய்ய ஏன் தயங்க வேண்டும்...? ஆபத்திற்கும் மரணத்திற்கும் அஞ்சி எனது கடமைகளை நான் கைவிட முடியுமா?" தாய் கடிந்து கொள்ளும் போது இப்படித்தான் கேட்பாள்.

இத்தனைக்கும் எதிரிகளும் துரோகிகளும் இரவு பகலாக அவள் நடத்தைகளைக் கண்காணித்துக் கொண்டிருந்தார்கள். இராணுவம் விட்டாலும் நாங்கள் விடோமென, துரோகக் கும்பல்கள் அவளைத் துரத்திக்கொண்டிருந்தார்கள்.

முன்பு சமூக விரோதக் கும்பல்களால் நடத்தப்படும் கூட்டங்களுக்குப் பாக்கியம் போயிருக்கிறாள். அங்கே... அவர்களின் அடாவடித்தனங்கள் பற்றியும் படுகொலைகள் பற்றியும் விளக்கம் கேட்பாள். அவற்றிற்கெல்லாம் பதில் கூற முடியாத அக்கும்பல்களுக்கு அவளைப் பகைத்துக்கொள்வதைத் தவிர வேறு வழி தெரிவதில்லை.

இப்பொழுது சமூக விரோதக் கும்பல்கள் விடுதலைப்புலிகளின் ஆதரவாளர்களைப் படுகொலை செய்து கொண்டிருக்கின்றன. அவளுக்கு எந்த நேரமும் எதுவும் நடக்கலாம். அவளை வெளிநாடு போகும்படி தாயும் உறவினர்களும் வற்புறுத்தினார்கள். "தேசத்தை விற்றுவிட்ட இந்தத் துரோகிகளுக்கு பயந்து என்நாட்டை விட்டு நான் ஏன் போகவேண்டும்?" திருப்பிக்கேட்டவளை, மாற்ற முடியாது என்று எண்ணிய அவளின் தாய் துக்கத்தை அடக்கிக் கொண்டாள்.

காலை ஒன்பது மணி இருக்கும்... அன்று பாக்கியம் வீட்டில் இல்லை. கடைசிக் குழந்தையையும் கூட்டிக்கொண்டு வெளியே போயிருந்தாள். சோதனைகளின் பொழுது இராணுவத்தினரின் தொல்லைகளைத் தவிர்ப்பதற்காக, அவள் எங்கு சென்றாலும்

*தனது கடைசிக் குழந்தையை கூட்டிச்செல்வது வழக்கம். ஆட்டுக்கு குழை ஒடித்துக்கொண்டிருந்த அவளது மூத்த மகன் வாகனச் சத்தம் மேட்டு வெளியே ஓடி வந்தான்... படலைக்கு வெளியே வான் ஒன்று நிறுத்தப்பட்டிருந்தது. ஆயுதம் தாங்கிய இளைஞர்கள் படலையைத் தள்ளிக்கொண்டு உள்ளே வந்தார்கள்.*

*வந்தவர்களில் ஒருவன் பையனைப் பிடித்து ஒரு உலுப்பு உலுப்பி "அம்மா எங்கே?" என்று உறுமினான். "அம்மா வீட்டில் இல்லை" என்று சொன்னவனுக்கு உடல் நடுங்கி வியர்த்துக் கொட்டியது.*

*பையனின் சேட்டைப் பிடித்து உலுப்பி கன்னத்தில் அறைந்தான். "ம்... சொல்லு அம்மா எங்கே...?" "அ ம்...மா ...ஆ...ஸ்பத்திரிக்குப் போட்டா" பையன் அழுதழுது தடுமாறியபடி கூறினான். யார் கேட்டாலும் அப்படித்தான் சொல்லும்படி பாக்கியம் சொல்லியிருந்தாள். "எப்ப வருவா...?" மீண்டும் உறுமினான்... "எ...எ... எப்பவருவனெண்டு சொல்லேல்ல." சிறிது தாமதித்தவன் அவன் கையை ஓங்கவே "மத்தியானம் வந்திடுவா" என்றான்.*

*பையனை விட்டுவிட்டு தமக்குள் ஏதோ பேசிக்கொண்டார்கள். பையனின் பதில் திருப்தி அளிக்கவில்லைப் போலும்... ஒருவன் உள்ளே சென்று... சிறிது நேரத்தில் திரும்பி வந்தான். பின் நால்வரும் அங்கிருந்து வெளியேறினார்கள்.*

*கடைக்குப் போயிருந்த பாக்கியத்தின் தாய் அப்போதுதான் பதைபதைத்து ஓடிவந்தாள். "என்ன தம்பியவை ஆரைத்தேடுறியள்...?" என்றாள். இறுதியாகப் போனவன் ஒருமுறை திருப்பி... அவளை எரித்துவிடுவதுபோல் பார்த்தான். பின் வேகமாகச் சென்று வானில் ஏறிக்கொண்டான்.*

*எதுவும் புரியாது விழித்தவள், பையன் கூறியவற்றைக் கேட்டதும் தலையில் அடித்துப் புலம்பினாள்.*

*மதியம் பன்னிரண்டு மணியிருக்கும். பாக்கியம் வந்தாள். வந்ததும் வராததுமாக அவளது தாய் அங்கு நடந்தவற்றைக் கூறி*

புலம்பினாள். மகனும் அழுதழுது ஒன்றும் விடாமல் தாய்க்கு கூறினான். பாக்கியத்திற்கு நிலைமை ஓரளவு விளங்கிவிட்டது. ஆனாலும் வெளியே காட்டிக் கொள்ளவில்லை... மகனை அணைத்து ஆறுதல் கூறினாள். "உதுக்குப் போய் இப்படி பயப்பிடுறியளே...? அவங்கள் அப்பிடித்தான் வெருட்டுவாங்கள். வரட்டும் நான் கதைக்கிறன்." சொல்லிவிட்டு கால்முகம் கழுவ கியற்றடிக்குச் சென்றாள்.

வெளியே வான் வந்து நிற்பது கேட்டது. அவள் வந்து விட்டதை அந்தக் கும்பல் முன்னரே அறிந்திருக்க வேண்டும். யாரையும் எதுவும் கேட்காமல் உடனடியாக வீட்டைச் சுற்றி வளைத்துக் கொண்டார்கள். நாய் ஒவ்வொருவரையும் கடித்து குதறுவது போல் பாய்ந்து பாய்ந்து குரைத்தது. பாக்கியம் கிணற்றடியில் நிற்பதைக் கண்ட ஒருவன் பாய்ந்து வந்து அவளின் கையைப் படித்தான். "சீ... விடடா" என்று உதறியவள் அவனைக் கீழே தள்ளிவிட்டாள். "டேய் இஞ்ச வாங்கோ... இஞ்சை நிற்கிறாள்..." கீழே கிடந்தவன் கத்தினான்.

வேலிக்கு மேலால் ஓரிரு தலைகள் எட்டிப் பார்த்தன. அயல் வீட்டாருக்கு விசயம் தெரிந்திருக்க வேணும். ஆனால் ஒருவருக்கும் உள்ளே வரத் தைரியம் இல்லை.

வீட்டிற்குள் இருந்து ஓடிவந்த இருவர் அவளைப் பிடித்துக்கொண்டார்கள். கைகள் இரண்டையும் இணைத்துப் பின்புறமாகக் கட்டினார்கள். அவள் திமிறினாள்.... விடுவிக்க முனைந்தாள்... ஆனால் அவர்கள் இருவரினதும் பிடி பலமாக இருந்தது.

கீழே கிடந்தவன் அவளை முறைத்துப் பார்த்தான். எழுந்துவந்து ஆத்திரம் தீர அவள் கன்னங்களில் மாறி மாறி அறைந்தான். தாயை அடிப்பதைக் கண்டதும் அவள் குழந்தைகள் வீரிட்டுக் கத்தினார்கள். பாக்கியத்தின் தாய் ஓடி வந்தாள். "ஐயோ அவளை ஒண்டுஞ் செய்யாதேங்கோ...!" கும்பிட்டு மன்றாடி குழறினாள். அதற்குள் அங்கு வந்த ஒருவன், அவன்தான் அந்தக் கும்பலின்

*தலைவனாக இருக்க வேண்டும். "டேய்...! ஏண்டா பாத்துக்கொண்டு நிக்கிறியள். இழுத்துக்கொண்டாறதுக்கு...?" கூறியவன் பல்லை நறநறவெனக் கடித்தபடி அவளை ஏற இறங்கப் பார்த்தான். பின் தானே அவளை வானைநோக்கி இழுத்துச் சென்றான். குழந்தைகள் அவளின் தாயுடன் படலைவரை குழறியபடி ஓடினார்கள். பாக்கியம் ஒருமுறை அவர்களைத் திருப்பிப் பார்த்தாள்... அவள் கண்களில் இருந்து நீர் வடிந்தது.*

*வானடிக்குச் சென்றதும் "ம்...ஏறு" கூட்டிச் சென்றவன் கத்தினான். அவள் ஏறவில்லை. பலவந்தமாக அவளைத் தூக்கி உள்ளே ஏத்தினார்கள்... குழந்தைகளிடம் இருந்தும் தாயிடமிருந்தும் அவளைப் பிரித்துக்கொண்டு அந்த வான் வேகமாகச் சென்று கொண்டிருந்தது.*

*அயலவர்கள் கூடிவிட்டனர். பாக்கியத்தின் தாய் மண்ணிலே புரண்டு அழுதாள். குழந்தைகள் துடித்துப் பதைத்து கதறினார்கள்.*

*பாக்கியத்தை ஏற்றிச்சென்ற வான் சற்றுத் தூரத்திலுள்ள ஒரு ஒழுங்கை முகப்பிலே சென்று திரும்பி நின்றது. கீழே இறங்கிக் கொண்ட ஒருவன் அவளைப் பார்த்து "இறங்கு" என்று உறுமினான். அவள் இறங்கவில்லை. "இறங்கடி கீழை" மறுபடியும் கத்தினான். வெறுப்போடு அவனை நிமிர்ந்து பார்த்தவள் இறங்கவில்லை. ஆத்திரமடைந்த ஒருவன் உள்ளேயிருந்து அவளைப் பலவந்தமாக தள்ளிவிட்டான். கீழே விழுந்தவளுக்கு வாகனத்தின் கதவு பலமாகத் தாக்கியது. வேதனையை முகத்தில் காட்டிக் கொள்ளாமல் "எதற்காக என்னைக் கொண்டுவந்தீங்கள்...?" என்றாள்.*

*"ம்... சுடத்தான்."*

*"அதுதான் ஏன் எண்டு கேக்கிறன்?"*

“என்னடி நடிக்கிறாள். நீ புலியளுக்குச் சாப்பாடு குடுக்கிறது தெரியாதெண்டு நினைச்சுக் கொண்டியோ...?”

“அதுக்கென்ன... நாட்டுக்காகப் போராடுறவங்களுக்கு உதவி செய்யிறதில என்ன பிழை...?”

“பொத்தடி வாயை பிழை சரி கதைக்க வந்திட்டா...” உறுமியவன் அவளைத் தரதரவென்று இழுத்துச் சென்று வேலியோடு கட்டினான்.

கண்களை மூடிக்கொண்ட அவளுக்கு, அழுது புலம்பும் குழந்தைகளும் தாயுமே கண்ணில் நின்றனர்.

அதைத் தொடர்ந்து...

இரண்டு வேட்டோசைகளின் அதிர்வு அந்த ஊரின் தொலைதூரம் பாய்ந்தது.

வீட்டின் படலையில் நின்ற பாக்கியத்தின் தாய் புரிந்து கொண்டவளாய் “ஐ...யோ...! மகளே...!” என்ற தலையிலடித்து ஓலமிட்டாள்.

ஆச்சியின் சேலைத் தலைப்பைப் பற்றிக் கொண்டு அந்த அநாதைக் குழந்தைகள்...

## ஒரு கோப்பை தேநீர்

***-மலைமகள்*** *("வெளிச்சம்", வி.பு கலை பண்பாட்டுக் கழகம், மார்கழி 1999, -மறுபதிப்பு "மலைமகள் கதைகள்" சிறுகதை தொகுப்பு, கப்டன் வானதி வெளியீட்டகம் – வி.பு மகளிர் பிரிவு, 2004*

*அலை ஓய்ந்திருந்தபோது...*

காலையில் பிட்டும் கறியும், மதியம் சோறும் கறியும், இரவு பிட்டும் கறியும்.

பரவாயில்லை. பின்னர்.

காலையில் பிட்டும் கறியும், மதியமும் அரவும் சோறும் கறியும்.

இதுவும் பரவாயில்லை.

கொஞ்ச நாளின் பின்,

மூன்று நேரமுமே சோறும் கறியும். அதுவும் எப்படியென்றால் காலையில் சோறும் கத்தரிக்காய் கறியும், மதியம் கத்தரிக்காய் கறியும் சோறும், இரவு சோறும் கத்தரிக்காய் கறியும். அதிலும் மதியமே இரவுக்குரிய சோறும் சேர்த்து வரும்.

இன்னும் கொஞ்ச நாளின் பின்,

காலையில் கஞ்சி, மதியமும் இரவும் சோறும் கத்தரிக்காயும், கத்தரிக்காயும் சோறும்.

"கத்தரிக்காயை கண்டுபிடிச்சவன் நாசமாப் போக!"

"கத்தரித்தோட்டம் வைத்திருப்பவர்கள் தலையில் இடி விழ!"

என்றெல்லாம் உரத்த குரலில் சாபமிட்டவாறே ஒவ்வொரு கவளமாக விழுங்கினோம். நாவிலுள்ள சுவை மொட்டுக்களுக்கெல்லாம் கட்டாய ஓய்வு கொடுத்தோம். உணவு விடயத்தில் ஒருவாறு பற்றற்ற நிலைக்கு வந்த நாம் ஒரு கோப்பை தேநீருடன் திருப்தியடைந்தோம். எங்கள் முழுக் கவனத்தையும் எதிர் முன்னரங்கிலுள்ள இராணுவம் மீதே திருப்பினோம்.

''உன்னால்தானே எங்களுக்கு இந்த நிலை. கொஞ்சம் பொறு பகைவனே, உன்னாலேயே நாம் பழைய நிலையை அடைவோம்'' என்று கறுவிக்கொண்டோம். கோப அலைகள் குமுறியெழ கடமைகளில் மூழ்கிப்போனோம்.

கத்தரிக்காயுடன் எங்கள் விருப்பத்துக்கு மாறாக கை கோர்த்துக்கொண்ட காரணத்தால், சோற்றுப் பைகள் கேட்பாரற்று தலைமேல் மரக்கிளைகளில் தொங்கின. அண்ணாந்து பார்த்தால் கோபம்தான் வரும். கூடவே கவலையும் வரும். இதைப்போய் எறிவதா? என்னவென்று? எம் மக்கள் ஒருநேர உணவுக்கே அல்லாடிக் கொண்டிருக்கையில், இவ்வளவு சோற்றையும் வெட்டிப் புதைப்பதா?

மனம் கேட்கவில்லை (மனம் மட்டுமென்ன, வயிறும் கேட்கவில்லை) அண்ணாந்து பார்த்துக்கொண்டிருக்கையிலேயே புதிய சிந்தனை பளிச்சிட்டது (சேர் ஐசாக் நியூட்டனும் இப்படித்தானாமே. அப்பிள் பழத்தை அண்ணாந்து பார்த்துத்தான், பின் புவியீர்ப்பு சக்தியை கண்டு பிடித்தாராமே. நாங்களும் அப்படித்தான்.)

சிந்தனை வந்தால் பிறகென்ன, செயலாற்ற வேண்டியதுதானே. பரபரவென இயங்கினோம். காப்பரனை பலப்படுத்தவெனத் தரப்பட்டிருந்த உரப்பைகளுள் நல்லதாக ஒன்றை எடுத்து கழுவி உதறி வெயில் படக்கூடிய இடமாகப் பார்த்து, விரித்து, அதன்மேல் சோற்றுப் பருக்கைகளை பரப்பி காயவிட்டு மீண்டும் அரிசியாக்கினோம். தேநீர் சுடவைக்கும் அலுமினியப் பாத்திரத்தில் அதைக் கொட்டிக் கிளறிச் சூடேற்றி,

அடுப்பிலிருந்து இறக்கி, அந்தப் பாத்திரத்தில் வைத்தே இடித்துப் பொடியாக்கினோம். வெகு அபூர்வமாக வந்த பிட்டையும்கூட காயவைத்து வறுத்தோம்.

அதில் ஒரு பிடி அள்ளி வாயில் போட்டால் நறுக் முறுக் என்ற ஒலியுடன் தேவாமிர்தமாக வாயில் கரையும். இப்போது மாலை நேரத்திற்குரிய சிற்றுண்டி தயார். (மாலை நேரச் சிற்றுண்டியா? மண்ணதங்கட்டி. பசித்தபோதெல்லாம் ஒரு கோப்பை தேநீருடன் ஒரு பிடி மாவே வயிற்றை நிறைக்கும்.)

கை தவறிக்கூட ஒரு சோற்றை கீழே போடமாட்டோம். மூன்று நேரமும் எஞ்சிய சோற்றை சிற்றுண்டியாக்கும் திட்டம் உடனடியாகவே அனைத்து காவலரண்களுக்கும் பரவலாக்கப்பட்டது. ஒரு கோப்பை தேநீருடன் ஒரு தட்டுப் பொரிமா தரும் பலத்தில் ஒரு மணி நேரத்துள் ஒன்றரை அடி ஆழத்தில் காப்பகழி வெட்டலாம். கொழும்பிலிருந்து எவர் எதைத் தடுத்தாலும் எங்களுக்கென்ன? எங்களை ஒருவரும் அசைக்க இயலாது என்ற நிலையை காட்டுக்குள் தோற்றுவித்தோம்.

வெளியே உணவு நெருக்கடி அதிகரிக்க, எம் கையிருப்பிலுள்ள சீனியின் அளவு குறையத் தொடங்கியது. தேநீரில் சீனி கலந்து குடிப்பதில் சிக்கல் ஏற்பட்டது. சீனியைத் தொட்டுத் தேநீர் குடிக்கத் தொடங்கி, அதிலும் நெருக்கடி ஏற்பட, கையிலிருந்த சீனியைப் பொரிமாவுடன் கலந்துவிட்டு, அதனோடு தொட்டுத் தேநீர் குடிக்கத்தொடங்கினோம். தேநீருடன் கொறிப்பதற்கான உப உணவாகச் செய்து செய்து வைத்திருந்த பொரிமா கடைசியில் தேநீருக்கான மூலப் பொருட்களுள் ஒன்றானது.

வீரைப்பழ காலங்களில் வீரைப்பழ பாணியுடனும், பாலைப்பழ காலங்களில் பாலைப்பழ பாணியுடனும் சில நேரம் உலுவிந்தப்பழ பாணியுடனும் என்று அந்த ஒரு கோப்பை தேநீரை, எங்கள் அபிமானத் தேநீரை விதம் விதமாகக் குடித்தோம். ஒரு கோப்பை தேநீர் தரும் மன உற்சாகத்துடன்,

கஞ்சியும் கத்தரிக்காயும் தந்த பலத்துடன் கடமையில் கண்ணாயிருந்தோம். அருகிருந்து அரண்களை பொறுப்பெடுத்த எல்லைப்படையினர் எம் உணவைப் பார்த்து ஏங்கிப்போயினர்.

"என்ன பிள்ளையளே, அந்தச் சாப்பாட்டைச் சாப்பிட்டோ இந்த மாதிரிச் சண்டை பிடிக்கிறியள்?" என்று மலைத்துப் போனார்கள். சும்மா இடையிடையில் தாம் சாப்பிடுவதற்காக கொண்டு வந்த சொக்லேட்டுகளை எங்களுடன் பகிர்ந்து கொண்டார்கள். அவர்களுக்கு நன்றி சொல்லிவிட்டு அவற்றை வாங்கி காற்சட்டைப் பைகளுள் போட்டுக்கொள்வோம். ஒருதரம், இரண்டுதரம் இப்படியே போனது.

அவர்களுக்கு எம் செய்கை ஆச்சரியமாக இருந்திருக்க வேண்டும். ஒருமுறை கேட்டேவிட்டார்கள்.

"ஏனக்கா சாப்பிடாமல் பொக்கற்றில் வைக்கிறீங்க? நீங்கள் இதைச் சாப்பிடுங்கோ. உங்கட ஆட்களுக்கு கொண்டுபோய் குடுக்கிறதுக்கு நாங்க்ள ரொபி தாறம்" என்றார்கள். எங்களுக்கு சிரிப்பே வந்துவிட்டது.

"நாங்கள் இந்த ரொபியோடதான் அண்ணை ரீ குடிக்கிறனாங்க. எங்களிட்ட சீனி இல்லை" என்றோம்.

"இந்த நாலைஞ்சும் உங்களுக்கு எந்த மூலைக்கு காணும் அக்கா? ஒரு ரீ குடிக்க உங்களுக்கு எத்தனை ரொபி வேணும்?" என்றவர்கள்,

"ஒரு ரொபியில் நாலு தரம் குடிப்பம்." என்ற எம் பதிலில் அரண்டு போனார்கள். இன்னமும் தாம் காணாதிருக்கும் தம் போராளிச் சகோதரி, போராளி மகள், போராளி மருமகள், பெறாமகள், மைத்துனி எல்லோருமே எல்லையின் ஏதோ ஒரு மூலையில் இவர்களைப்போலத்தானே துன்பங்களுக்கு நடுவே வாழுவார்கள் என்ற நினைப்பு அவர்களை உலுப்பிவிட்டிருக்கவேண்டும். தம்மோடு கொண்டுவந்திருந்த

பிஸ்கற்றுகள், தின்பண்டங்கள், இனிப்புகள் என்று எல்லாவற்றையுமே எங்களிடத் தந்து,

''நாங்கள் ஒரு கிழமையில் போற ஆக்கள்தானே. நாங்கள் வீட்டுக்கு போயும் சாப்பிடுவம். நீங்கள் சாப்பிடுங்கோ'' என்றார்கள் ஈரமாகிய கண்களுடன்.

கொஞ்ச நாள் வெள்ளிதிசைதான். விதவிதமான தின்பண்டங்களுடன் சாயத் தண்ணீர் அமர்க்களப்பட்டது. இது அலை வீச முன்னர் நடந்த கதை.

அலை நடுவே...

ஒட்டுசுட்டான், நெடுங்கேணி, கரிப்பட்டமுறிப்பு, ஒலுமடு, மாங்குளம், கனகராயன்குளம் என்று தலைவரின் சிந்தனையை நடைமுறைப்படுத்தியவாறு அணிகள் நகர்ந்துகொண்டிருந்தன. எதிரி ஓடிய வழியொங்கிலும் அவனின் எச்சங்கள், பாதணிகள், மழைக்கவசங்கள், இடைப்பட்டிகள், சீஸ் ரின்கள், பொதி செய்யப்பட்ட பேரீச்சம்பழ அல்வாக்கள், அடுப்பபைவிட்டு இறக்கப்படாததால் தீய்ந்து போன கறிகள், மேசையில் பீங்கானில் பரிமாறி வைக்கப்பட்டிருந்த உயர் மட்ட உணவு வகையறாக்கள், குளிசாதனப் பெட்டிகளில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த பச்சைக் காய்கறிகள், உரித்த கோழிகள், உயர்ரகக் குடிவகைகள், பலதரப்பட்ட சோடாக்கள்... பட்டியல் நீண்டுகொண்டே போகும்.

கிளிதட்டு மறிக்கும் பாணியில் எதிரியுடன் திசைக்கொன்றாக மோதி, விரட்டி, குறுக்கே பாய்ந்து போய் அடிக்க, எதிரி பாய்ந்து ஓட, விரட்டியவாறு எதிரியின் பின்னாலேயே ஓடியதில் எல்லோருக்குமே கீழ்மூச்சு மேல்மூச்சு வாங்கியது. தாகத்தில் நாக்கு தொங்கிப்போயிற்று. நின்று நிதானிப்பதற்கிடையில், அவன் கண்காணாத தூரம் ஓடிவிடுவானே. விரட்டி ஓடியபோதே கிடைத்த ஓரிரு வினாடித் துளிகளில் வண்ணவண்ண நிறங்களில் இருந்த சோடாக்களை குடித்து சோடாவால் முகத்தையும் கழுவி, பீங்கானில் பரிமாறி மூடப்பட்டிருந்த விருந்தில் இரண்டு

கவளத்தை அள்ளி வாயில் போட்டு, கைகழுவவும் நேரமின்றி ஓமந்தைவரை எதிரியை ஓடஓடத் துரத்தினோம்.

சண்டை ஆரம்பிப்பதற்கு முதல் நாள் காலையில்கூட கஞ்சி குடித்த புலிகள் விரட்டியதில், ஓடுவதற்குப் பத்து நிமிடங்கள் முன்புவரை சீசும், பழமும், பிஸ்கற்றும், இறைச்சியும், மஞ்சள் சோறும் சாப்பிட்ட சிங்கங்கள் போட்டது போட்டபடி வாகனங்களிலேறி ஓமந்தைக்கப்பால் ஓடின.

# *விலை*

***-மலைமகள்*** *("மலைமகள் கதைகள்" சிறுகதை தொகுப்பு,, கப்டன் வானதி வெளியீட்டகம் – வி.பு மகளிரிர் பிரிவு, 2004.*

*குறிப்பு - இக்கதையில் வரும் சுறிபு என்ற சொல் கவச எதிர்ப்பு ஆயுதம் செலுத்தியை குறிக்கிறது* (**RPG - Rocket-Propelled Grenade**)

*காலையிலிருந்து மனம் படும் பாட்டை என்னவென்று விவரிக்க முடியவில்லை. துயரமா? பெருமிதமா? என்ன இது? என்னவென்றே இனங்காணமுடியாமல் நெஞ்சை பிசைந்துகொண்டிருக்கின்றது. தான் எங்கிருந்தாலும் வாரம் ஒருமுறையாவது ஓடிவந்து எங்களை பார்க்கும் இசைச்செல்வி வழக்கம்போல பகிடிக்கதைகளை மட்டும் சொல்லாமல், இன்று ஏன் இதைச் சொன்னாள்? சாதாரணமானவர்களுக்கு வேண்டுமானால் அவள் சொன்னது சாதாரண செய்தியாயிருக்கலாம் எனக்கு...?*

*என்னை கட்டுப்படுத்த முடியாமல் கண்ணீர் வடிய முற்பட, சிரமப்பட்டு அதை அடக்க முயற்சித்தேன். பக்கத்துக் கட்டிலில் படுத்தவாறு 'வந்தார்கள் வென்றார்கள்' புத்தகத்தை வாசித்துக்கொண்டிருக்கும் கயல்விழி நிமிர்ந்து பார்த்தால் என்னவென்று கேட்பாள். ஏன் அழுகிறேன் என்று எனக்கே தெரியவில்லை. இவளுக்கு என்ன சொல்ல முடியும்?*

*வெளியில் போய் கொஞ்ச நேரம் நித்தியகல்யாணி மரத்தடியில் இருப்பது நல்லதுபோலப் பட்டது. வதனியைக் கூப்பிட்டு சக்கர நாற்காலியைக் கொண்டுவரச் சொன்னேன். வதனி வந்ததும், சக்கர நாற்காலிக்கு மாற்றிக்கொண்டேன். முன்பெல்லாம் இது எனக்கு மிகவும் கடினமான விடயம். உடலுக்கு மட்டுமல்ல மனதுக்கும்தான். இடுப்புக்குக் கீழே உடம்பே இல்லாததுபோல் மனம் இடையிடையே திடுக்கிட, இரவில் எழும்பி*

கால்களிரண்டையும் கைகளால் தொட்டுப் பார்த்துக்கொள்வேன். கழுத்துக்குக் கீழே உணர்வில்லாத நிலையிலும் உற்சாகமாகப் பாடல்களைப் பாடிக்கொண்டிருக்கும் தாரணியை மிகமிக ஆச்சரியமாகப் பார்ப்பேன். இப்போது எனக்கும் பழகிவிட்டது.

எனது சக்கர நாற்காலி உருண்ட சத்தத்திற்கும் கயல்விழி அசையவில்லை. கடைசியாகத் தலைவர் அவர்கள் எங்களைச் சந்தித்தபோது அவர் வாசிக்கச் சொன்ன புத்தகம் அது. அவர் போன கையோடு, வந்தவர்கள் போனவர்கள் எல்லோரிடமும் சொல்லிப் புத்தகத்தை எடுப்பித்துவிட்டாள். இன்னமும்தான் புத்தகத்தை விட்டு தலையை உயர்த்தினாளில்லை. நிமிர்ந்து பார்த்தாலாவது அவளையும் நித்தியகல்யாணியடிக்கு வரச் சொல்லலாம். என்ன பிரச்சனையென்றாலும் அவளோடு கதைத்தால் மனம் ஆறும்.

வதனி என்னை படிகளில் இறக்கிய போது எழுந்த சத்தத்திற்கும் நிமிர்ந்தாளில்லை. அவளைக் குழப்பவேண்டாம். படிகளால் இறங்கியதும் வதனியைப் போகச் சொல்லிவிட்டு, நானே நாற்காலியை உருட்டியவாறு நித்தியகல்யாணியடிக்குப் போனேன்.

மரம் நிறையப் பூக்கள். காற்றோடு சேர்ந்து அசைந்து ஒன்றுடன் ஒன்று உரசி ஏதோ இரகசியம் பேசிச் சிரித்துக்கொண்டன எங்களைப்போல. சிரிப்பதைத் தவிர வேறென்ன வேலை அவைக்கு? கிளிநொச்சிச் சண்டைக்கு ஆயத்தம் நடந்துகொண்டிருந்தபோதும் இப்படித்தான். அணிகளைப் பிரிப்பதும் நகர்த்துவதுமாக அவசர வேலைகள் நடந்த நேரம்கூட எங்களின் சிரிப்பு ஓயவில்லை. ஆமறிக்காரர் ஆயுத விபரங்களை எடுப்பதும், ஆயுத வெடிபொருட்களைக் கொடுப்பதுமாக ஓடுபட, அணிகளின் விபரங்கள் சரிதானா என்று அறிக்கையாளர்கள் திருப்பித் திருப்பிச் சரிபார்க்க, சாக்குத் தொப்பி எடுத்தாயா, தண்ணீர்கான் எடுத்தாயா என்பதுமாக எல்லோரும் அல்லோலகல்லோலப்பட, நாங்கள் இரகசியங்கள் பேசிச் சிரித்துக்கொண்டோம். கதைத்துச் சிரிக்க ஆயிரம்

விடயங்கள் இருந்தன எங்களிடம். அணிகளை அமைதியாக இருக்கும்படி அதட்டிய பொறுப்பாளர்களின் குரலையும் மீறி, ஏதோ இனி இப்படிச் சிரிக்க நேரம் வராது என்பது போலவும், இதுதான் கடைசிச் சிரிப்பு என்பது போலவும் அடக்கமாட்டாமல் சிரித்துக் கொண்டிருந்தோம்.

அது கடைசிச் சிரிப்பு இல்லைத்தான். ஆனால் அவர்களுடன் இருந்து சிரித்த கடைசிச் சிரிப்பு அதுதான். அன்று கும்மாளம் அடித்தவர்களில் இசைசெல்வி, கயல்விழி, நான் என்று மிகச் சிலரே அந்தச் சண்டையின் நினைவுகளைச் சுமந்துகொண்டிருக்கிறோம். காலையில் வந்து கதைத்துக்கொண்டிருந்த இசைச்செல்வி புறப்படும்போதுதான் திடீரென்று கேட்டாள்.

''ஏய் மயூரி, சத்ஜெய நேரம் நீ கரடிப்போக்கடியில் நிண்ட பொசிசன் நினைவிருக்கோ?''

எப்பிடி எனக்கு மறக்கும்? நான் நிலை அமைத்திருந்த பூவரசு வேலியடியும், அந்த வயல் காணிக்குள்ளிருந்த ஒரேயொரு கட்டுக் கிணறும்.... குளிக்க, குடிநீர் எடுக்க வருகின்ற எல்லோருமே என்னுடைய நிலையில் பத்துநிமிடம் நின்று பம்பலடிப்பது போதாதென்று தேநீர் தரும்படி அடம்பிடித்து வாங்கிக் குடித்து, எனது ஒருமாதச் சீனியை பத்து நாட்களிலேயே முடித்துவிட்டுப் போவதுமாக, மயூரி ரீ கபே என்று அழைக்கப்பட்ட எனது காப்பரனை எப்பிடி நான் மறப்பேன்? புன்னகைத்தவாறு நான் தலையாட்ட இசைச்செல்வி சொன்னாள்.

''உன்ர கட்டுக் கிணத்துக் காணி, போன கிழமை ஆறு லட்சத்துக்கு விலை போட்டுதாம்''

என்று சொல்லிவிட்டு அவள் போய்விட்டாள். என்னால் இந்த நினைவிலிருந்து மீள முடியவில்லை. இப்போதும் நல்ல நினைவிருக்கிறது. யாழ் வீதியை அண்டி சுருதியின் சுரிபு நிலை. அவளுடைய வலப்புறம் கட்டுக்கிணற்றுக்கு நேர் முன்னே

என்னுடைய நிலை. அன்று விடிந்ததிலிருந்து கடும் செல் மழை. அண்ணாச்சி புறப்படப்போகிறார் என்று புரிந்துகொண்டு நாங்களும் ஆயத்தமானோம். வண்டின் தொடர் இரைச்சல் காதுகளில் விழத்தொடங்க,

'இண்டைக்கு அந்த மாதிரி ஒரு சண்டை நடக்கும். வரட்டும். எல்லாற்றை மண்டையும் உடைக்கிறன்' என்று சுருதி என்னைப்பார்த்துக் கத்தினாள்.

செல்மழை எங்களைக் கடந்து பின்னுக்கு நகர்ந்தது. அப்படியென்றால் அண்ணாச்சி எங்களை நெருங்கப்போகிறார் என்று பொருள். ராங்கிகளின் இரைச்சல் யாழ்சாலையில் மட்டுமல்ல, வயற்காணிகளூடாகவும் கேட்கத் தொடங்க, பரந்த சண்டை ஒன்றுக்குத் தயாரானோம். சுருதி செல்லை லோட் பண்ணியவாறு, ராங்க் சத்தத்திற்கு காதைக் கொடுத்துக்கொண்டிருந்தாள். எங்களின் துப்பாக்கிகளுக்கு வேலையே இருக்கவில்லை. எவனாவது இறங்கி வந்தாலல்லவா சுடுவதற்று? சுருதி ஒரு ராங்கைக் கண்டுவிட்டாள் போலிருக்கிறது. எனக்குக் கையைக் காட்டிவிட்டு அடிப்பதற்கு வசதியாகப் பூவரசு வேலியோடு வலப்புறமாக நகர்ந்து தன்னை நிலைப்படுத்தினாள். ஆங்... இப்போது எனக்கும் ஒரு ராங்க் தெரிகிறது. ஒரு தரம் இமை வெட்டித் திறப்பதற்கிடையில் ராங்கின் சுழல் மேடை பறந்தது. சுருதி என்ன செய்கிறாள் என்று பார்ப்பதற்கிடையில் அடுத்த செல்லை அவளின் சுறிபு உதவியாளர் லோட் பண்ணிவிட்டிருந்தாள். இரண்டாவது அடியோடு ராங்க் சிதறியது. ஒரே புகைமண்டலம். சுருதி என்னை எட்டிப் பார்த்துவிட்டு லோஞ்சரை உயர்த்தியவாறு ஒருமுறை துள்ளினாள். அவளின் கால்கள் நிலத்தில் படமுன்னரே கூவல் ஒலியொன்று எங்களை நெருங்க, நான் சடாரென்று குப்புறப் படுத்துக்கொண்டேன். செவிப்பாறையை கிழிக்காத குறையாக இரண்டு செல்கள் தலைக்கு மேலேயே விழுந்தன போல் வெடிக்க, மண்கட்டிகள், மரக்கொப்புகள் எல்லாம் அளவு கணக்கில்லாமல் என்மேல் கொட்டின. தலையை மட்டும்

*உயர்த்திப் பார்த்தேன். சுருதி சாய்ந்து நின்ற பூவரசு மரத்தையே காணவில்லை. புழுதிதான் பறந்துகொண்டிருந்தது.*

*"சுருதீ..." என்று கத்தினேன். என் குரல் வெளியே வந்ததோ தெரியவில்லை எனக்குப் பதில் கேட்கவில்லை. அவளருகே நின்ற உதவியாளரையும் காணவில்லை. அவளுடைய சுறிபு காப்பாளர் மட்டும் நிலத்தில் குப்புறப்படுத்தவாறு திகைப்போடு நிமிர்ந்து என்னைப் பார்த்தாள். அதற்கு மேல் தாமதம் செய்ய நேரமும் இருக்கவில்லை. நான் என்னென்ன செய்தேன் என்பதுகூட என் நினைவில் இல்லை. என்னோடு நின்றவர்களில் ஒருத்தியை சுருதியின் காப்பாளருக்கு உதவியாக அவளின் காப்பரனுக்கு அனுப்பிவிட்டு, மற்றவளும் நானுமாக எங்கள் காப்பரனில் நின்று சண்டை பிடித்ததைத்தவிர, வேறொன்றும் நினைவில்லை.*

*இதெல்லாம் நடந்து இரண்டு, மூன்று நாட்களின் பின்னர் கிணற்றடிப் புற்களிடையே ஒரு ஒற்றைக்கால் செருப்பு "SI" என்று எழுதி இருந்தது. சுருதியின் பெயரை வெள்ளை மையால் நான் எழுதிக்கொடுத்த செருப்பு. கரடிப்போக்கு எதிரியிடம் விடுபடும்வரை அந்த ஒற்றைக்கால் செருப்பு என் காப்பரனில் இருந்தது.*

*அன்றைக்கு நான் அழவில்லை. மனம் இறுகிப்போய்க் கிடந்ததோ என்னவோ. கொஞ்ச நேரம் முதல் வந்த கண்ணீரும் இப்போது உலர்ந்து விட்டது. மனதைத்தான் எதுவோ உலுப்பிக்கொண்டிருந்தது. அப்போதெல்லாம் தொடர்ந்தும் சண்டைகளிலேயே நின்றதால் நினைவுகள் மனதில் புதைந்து போயிருக்கலாம். இப்போது மூன்று வருடங்களாகக் கட்டிலும் சக்கரநாற்காலியுமாக ஓய்வாக இருப்பதனால் எல்லாம் பீரிட்டெழுகின்றதோ? எல்லாவற்றையும் எப்படி மறக்க முடியும்? சுருதி எங்களோடு இருந்த நாட்களை மறக்க முடியுமா? அந்த சண்டை நடப்பதற்கு ஒரு கிழமைக்கு முன்னர் வந்த ஐயா ஒருவர் வீதியில் நின்றவாறே, காணியைப் பார்த்து அழுதாரே ஒரு*

*அழுகை, வாழ்வைத் தொலைத்த துயர் தாங்க மாட்டாமல். அதை மறக்க முடியுமா?*

*அன்று ஒரு கறி வைப்போம் என்று எங்கேயோ போய் முருங்கைக்காய் பிடுங்கி வந்த சுருதிதான் அவரை முதலில் கண்டவள். ஏதோ வேலையாக என்னுடைய காப்பரனில் நின்ற நான், இவள் யாருடனோ கதைக்கும் குரல் கேட்டு எட்டிப் பார்த்துவிட்டு ஓடிப்போய் என்னவென்று கேட்டேன்.*

*"சண்டை நடக்கிற இடத்துக்கு கிட்ட ஏன் ஐயா வந்தனீங்கள், அவன் செல் அடிப்பான் எண்டு கேக்க, அழுகிறாரடி" என்றாள் இவள். எனக்குப் பார்க்க பெரிய சங்கடமாக இருந்தது. அப்பாக்கள் அழுததை நான் ஒருபோதும் பார்க்கவில்லை. எங்களுடைய அப்பா சனி, ஞாயிறு விடுமுறை நாட்களில்தான் வீட்டுக்க வருவார். வீட்டில் எல்லா வேலையும் செய்வார். அம்மாவுக்கு சமைத்தும் கொடுப்பார். எங்களுக்கு குளிக்கத் தண்ணீர் அள்ளித் தருவார். பின்னேரமென்றால் மடமடப்பான சாறமும் சேட்டும் போட்டுக் குறுநில மன்னர் போல வெளிக்கிட்டுப் போய் கடற்கரையில் காலாற நடந்து வருவார். இரவு எங்களோடு சாப்பிடுவார். நிறையக் கதைப்பார். அப்பாவாவது அழுவதாவது?*

*அந்த ஐயா அழ எனக்கு அப்பாவின் நினைவு வர, வயிற்றைப் பிசைந்தது. அவர் துவாயால் வாயைப் பொத்தியவாறு விம்மிக் கொண்டிருந்தார். கண்ணீர் ஓடிக்கொண்டேயிருந்தது. என்னுடை அப்பாவை விடவும், இவருக்கு வயது கூட. இவருடைய பிள்ளைகள் எங்களை விடவும் பெரிய அக்காக்கள் அண்ணாக்களாகத்தான் இருப்பார்கள். காணியைப் பார்த்து அழுவதால், இது இவருடையதாகத்தான் இருக்கவேண்டும். ஆனால் காணி போனாலும் இவ்வளவு பெரிய அக்காக்களும் அண்ணாக்களும் இவரை வைத்துப் பார்க்க மாட்டார்களோ? நான் மனதிற்குள் இதைப்பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். அதற்கிடையில் என்னுடன் நிற்கும் ஒருத்தி தேநீரோடு வந்து,*

*“குடியுங்கோ ஐயா, தூரத்திலிருந்து வந்திருப்பீங்கள்” என்றாள். இரண்டு கைகளாலும் தேநீர்க் கோப்பையை வாங்கி குடித்து முடித்து, முகத்தை துடைத்த பின், அவரின் மனம் சற்றுத் தெளிந்திருப்பதுபோல் எனக்குப் பட்டது. பெருமூச்சொன்றை விட்டுக்கொண்டு தானாகவே அவர் கதைத்தார்.*

*“எனக்கு ஏழு பொம்பிளைப் பிள்ளைகளம்மா. ஆறு பேர் குடும்பமாயிட்டுதுகள். மூத்தவள் மட்டும் வீட்டோடை இருக்கிறாள். முப்பத்தி இண்டு வயசு பிள்ளைக்குச் செவ்வாய் குற்றம். இவ்வளவு காலமும் ஒண்டும் சரிவரேல்ல. நான் பெரிய கமக்காரனம்மா. பரந்தனில, கரடிப்போக்கில எனக்கு வயல் காணியள் இருக்கு. ஏழு பேரையுமே கஷ்டம் தெரியாமத்தான் வளத்தனான். பிள்ளையளுக்கே எல்லாத்தையும் பிரிச்சுக் குடுத்திட்டன். இந்தக் காணியும் மில்லும் மூத்தவளுக்கு. இப்பத்தான் பிள்ளைக்கு ஒரு இடம் பொருந்தி வந்திருக்கு. மாப்பிள்ளை பகுதி கொஞ்சம் கஷ்டம். காணியையும் மில்லையும் பாத்திட்டுத்தான் ஓமெண்டு சொன்னது” மூச்சை ஆழமாக இழுத்துவிட்டுச் சொன்னார்.*

*“இப்ப காணியும் போய் மில்லும் போய் என்ர குஞ்சின்ர வாழ்க்கையும் போயிட்டுது. ம். ஏதோ எனக்கொருக்கா காணியையும் மில்லையும் பார்க்கோணும்போல இருந்தது. உங்களிட்டையோ ஆமிட்டையோ என்றுகூடத் தெரியாமத்தான் வந்தனான். இனி நான் இருந்தும் என்ரை பிள்ளைக்கு என்னத்தை செய்யப்போறன்?”*

*துவாயை உதறிக்கொண்டு எழுந்தவரிடம், மில் இருக்கும் இடத்தைக் கேட்டாள் சுருதி. இராணுவம் நிலைகொண்டிருந்த பகுதியை நோக்கி கையைக் காட்டினார்.*

*“நான் வாறன் மக்கள். நல்லாயிருங்கோ” என்றவாறு மிதிவண்டியை உருட்டிக்கொண்டு தளர்வாக நடந்து போனவரின் பின்னே ஓடிப்போன சுருதி,*

*‘‘செல்லடிப்பான். கெதியிலை போகவேணும் ஐயா’’ என்று சொல்ல அவர் மிதிவண்டியிலேறிப் போனார். சுருதி திரும்பியும் ஓட்டத்தில் வந்தாள்.*

*‘‘ஏன்ரி, காணியும் மில்லும் இல்லாத பொம்பிளையைக் கலியாணம் செய்ய ஊருலகத்தில ஒரு ஆம்பிளையளும் இல்லையோ?’’ என்றாள்.*

*‘‘இல்லாதபடியாத்தான் ஐயா அழுகிறார்’’ என்றேன் நான்.*

*சுருதி தலையை ஆட்டியவாறு சொன்னாள்.*

*‘‘எனக்கும் இரண்டு அண்ணன்மார் இருக்கினம். சீதனம் வாங்கித்தான் கலியாணம் கட்டிறதென்டா, உங்களுக்கு ஒரு தங்கச்சி இருக்குதெண்டதை மறந்திடுங்கோ எண்டு கடிதம் எழுதப்போறன்’’ என்றவளின் முகத்தில் தெரிந்தது கோபமா? அல்லது வேதனையா? அல்லது இரண்டும் கலந்த ஒன்றா?*

*அன்றைக்கு முருங்கக்காய் சமைக்கவில்லை. அன்று முழுவதும் நாங்கள் அந்த ஐயாவை, முகம் தெரியாத அக்காவை அவர்கள் வாழ்ந்திருக்கக் கூடிய வாழ்க்கையைப் பற்றியே கதைத்துக்கொண்டிருந்தோம். இதற்கிடையில் சுருதி தன் தமையன்மாருக்குக் கடிதம் எழுதி, வெளி வேலைக்குப் போனவர்களிடம் அஞ்சல் செய்யுமாறு கொடுத்துவிட்டாள்.*

*‘‘இண்டையிலிருந்து இது எங்கடை காணி. இந்தக் காணியை அக்காவின்ரை கையிலை குடுக்கிறவரைக்கும் இதைப் பாதுகாக்கிறது எங்கடை பொறுப்பு. இதை அவனிட்டை விடக்கூடாது விடுபட்டாலும் அடிச்சுப் படிப்பம்.’’ என்றாள் சுருதி திடீரென்று.*

*இந்தக் கதை அந்த நேரம் சண்டையில் நின்ற அநேகம் பேருக்குத் தெரியும். எல்லோருமாகச் சேர்ந்து எங்களை ‘‘கட்டுக்கிணத்துக் காணிக்காரர்’’ ஆக்கிவிட்டார்கள்.*

*இப்போதுதான் இந்தக் காணி விலைபோகின்றதா?*

*1998 இல் கிளிநொச்சியை நாங்கள் மீட்டபோது அக்காவின் காணியும் மில்லும் மீண்டுவிட்டன. கண்ணிவெடிகள் முடிந்தவரை அகற்றப்பட்டு, போன வருடம்தான் காணிகள், வீடுகளெல்லாம் உரியவர்களிடம் ஒப்படைக்கப்பட்டன. 1996 இல் முப்பத்துமூன்று வயதென்றால், இப்போது அக்காவுக்கு முப்பத்தெட்டு வயதாயிருக்கும். இப்போதுதான் காணி விலை போகின்றது என்றால், இனித்தான் கலியாணமோ? அல்லது காணியில்லாவிட்டாலும் பரவாயில்லை என்று அக்காவை அப்போதே திருமணம் செய்த அண்ணாதான் இப்போது ஏதும் தேவைக்காக காணியை விற்கிறாரோ? யோசனைகள் பல மாதிரி ஓடின.*

*“விடக்கூடாது... விட்டாலும் பிடிச்சுக் குடுக்கவேணும்” என்று சொன்ன சுருதி எதிரியிடம் எம் நிலம் பறி போகாமல் நாம் தடுத்த ஒரு சண்டையில் நிலத்தின் விலையாக உயிரைக் கொடுத்தாள். பறிபோன நிலத்தை மீட்ட சண்டையில் கயல்விழி, நானெல்லாம் எமது உடலின் பாதி இயக்கத்தை, கொஞ்சப் பேர் உறுப்புக்களை, இன்னும் கொஞ்சப் பேர் உயிர்களை. நிறையக் கொடுத்து விட்டோம்.*

*எனக்குத் தெரிந்த, அறிந்த, பழகிய முகங்கள் பலரை அதன் பின்னர் நான் சந்திக்கவுமில்லை. யார் யார் இருக்கிறார்களோ? எந்தத் துறையில் என்ன பணியைச் செய்கிறார்களோ? எல்லோரையும் திடீரென்று ஒருநாள் சந்தித்தால்?*

*எனக்கு எல்லாவற்றையும் கயல்விழியுடன் கதைக்க வேண்டும் போலிருக்கின்றது. உடனேயே கதைக்க வேண்டும். எல்லாவற்றையும் அவளோடு சேர்ந்து மீட்க வேண்டும். வதனியைக் கூப்பிட்டவாறே வீட்டுவாசலை நோக்கி நாற்காலியை உருட்டத்தொடங்கினேன்.*

## *பொதுவெளி வருகை*

*ஈழத்தமிழரின் அரசியல் போராட்டம் 1948 இல் இலங்கைக்கு சுதந்திரம் கிடைக்கும் முன்னரே ஆரம்பித்து விட்டது. தொடர்ந்த தசாப்தங்களில் துண்டுதுண்டாக இருந்த ஈழத்தமிழரை இப்போராட்டம் ஒருங்கிணைத்தது. பெண்கள் இப்போராட்டத்தில் 1970 களுக்கு முன்னர் பங்குபற்றியதற்கான ஆதாரங்கள் எதுவும் இல்லை. ஆனால் 1958 இல் இடம்பெற்ற சத்தியாக்கிரக போராட்டத்தில் அவர்கள் பங்குபற்றியிருந்தார்கள்.*

*1960களில் கம்யூனிஸ்ட் கட்சியின் பங்குடன் வேறு ஒரு போராட்டம் தமிழர் தாயகத்தில் முனைப்புப் பெற்றிருந்தது. தீண்டாமைக்கு எதிரான இப்போராட்டம் 1967 அக்டோபரில் உச்சக் கட்டத்தை அடைந்தது. இதுவே 'அக்டோபர் புரட்சி' என்று அழைக்கப்படுகிறது. அக்டோபர் புரட்சியைப் பதியும் ஆவணத்தில் ஒரு தகவல் புதைந்து கிடக்கிறது.* ***ஒரு சம்பவத்தில் செல்லக்கிளி என்றழைக்கப்படும் ஒரு பெண், கிரனைட் எறிந்தார் என்பதால் பொலிசாரின் தேடுதல் வேட்டைக்கு உள்ளாகியிருந்தார் என்று அங்கு பதியப்பட்டிருக்கிறது[1] . ஆயுதமேந்திய முதலாவது ஈழத்தமிழ் பெண் போராளி இவராக இருக்கலாமோ?***

*தீண்டாமை ஒழிப்பு போராட்டம் இடம்பெற்ற அதே காலகட்டத்தில் தமிழர் சுயநிர்ணய உரிமைக்கான ஆயுதப் போராட்டம் என்ற சிந்தனையும் முனைப்புப் பெற்றுக் கொண்டு வந்தது. பல்கலைக்கழக அனுமதிக்கு கல்வியில் மேம்பட்ட பகுதிகளில் இருந்து வரும் மாணவர்கள் அதிக புள்ளிகள் எடுக்க வேண்டிய ஒரு திட்டம் இலங்கை அரசால் 1970 இல் கொண்டுவரப்பட்ட போது இதுவும் ஆயுதப்போராட்ட சிந்தனை தமிழ் இளைஞர்கள் மத்தியில், முக்கியமாக யாழ்பாண இளைஞர்கள் மத்தியில், முனைப்புப்பெற ஒரு காரணியாக இருந்தது. யாழ்பாணத்து இளையோர் சிலர், ஆயதப்*

---

[1] *"இல்கையில் சாதியமும் அதற்கெதிரான போராட்டங்களும்", வெகுஜனன்-இராவணன், சவு த் விஷன், தமிழ் நாடு,* page 173

*போராட்டத்தை மனதில் கொண்டு, "தமிழ் மாணவர் பேரவை (TSU) என்ற அமைப்பை உருவாக்கினார்கள். தமிழ்ப் பெண்களும் பல்கலைக்கழக அனுமதித் திட்டத்தால் பாதிக்கப்பட்டிருந்தும் அவர்கள் இவ்வமைப்பில் பங்கெடுக்கவில்லை. யாழ்பாணத்தின் அன்றைய பழமைவாத சமூகத்தை இதனூடாகவும் புரிந்து கொள்ளலாம். இச்சமூகம் அன்றும் பெண்கள் கல்வி கற்கவும் வேலைக்கு போகவும் ஊக்கம் கொடுத்தாலும், இதற்கு வெளியே அவர்களுக்கு கடுமையான கட்டுப்பாடுகளை விதித்து குடும்ப வட்டத்திற்குள் அடக்கியே வைத்திருந்தது.*

*பிற்காலத்தில் உருவான பல ஆயுதப் போராட்ட குழுக்களின் தலைவர்கள் "தமிழ் மாணவர் பேரவையில்" பங்கு பற்றியிருக்கிறார்கள். இவர்களில் இருவர்தான் பொன் சிவகுமாரனும் வே.பிரபாகரனும். பொன் சிவகுமாரன் ஒரு ஆயுதக்குழுவை உருவாக்கவில்லை. தனிப்படவே சில வன்முறைகளில் ஈடுபட்டார். இலங்கைப் பொலிசாரின் கைகளில் அகப்படாமல் இருக்க பொன் சிவகுமாரன் 1974 இல் சயனைட் குப்பி கடித்து இறந்த முதல் மாவீரரானார். பொன் சிவகுமாரனின் சகோதரியின் நண்பர்களான வள்ளி, அற்புதம் என்ற இரு பெண்கள் சிவகுமாரனின் வன்முறைகளுக்கு துணையாக இயங்கினார்கள் என்று சொல்லப்படுகிறது. இது உண்மையானால் தமிழீழத்துக்கான ஆயுதப்போராட்டத்தில் இறங்கிய முதல் பெண்கள் இவர்கள்தான். ஆக 1973 இலேயே ஆயதப்போராட்ட முனைப்பு பாலின எல்லையைத் தாண்ட ஆரம்பித்து விட்டது.*

*"தமிழ் மாணவர் பேரவை" சில ஆண்டுகளில் கலைக்கப்பட்டு, 1973 இல் ஆயுதப்போராட்ட சிந்தனையுடன் "தமிழ் இளைஞர் பேரவை" என்ற அமைப்பு உருவானது. இதில் முக்கிய உறுப்பினராக இயங்கிய புஷ்பராஜா என்பவர் 2006 இல் தனது அனுபவங்களை நூலாக வெளிட்டிருக்கிறார்[2]. தமிழீழத்தில் இயங்கிய ஐந்து முதன்மையான ஆயுதப்போராட்ட அமைப்புகளில் பின்னர் முக்கிய உறுப்பினர்களாக இருந்த பலர்*

---

[2] *"ஈழப்போராட்டத்தில் எனது சாட்சியம்", சி. புஸ்பராஜா, அடையாளம் வெளியீடு, 2006, தமிழ்நாடு*

*"தமிழ் இளைஞர் பேரவையில்" இயங்கினார்கள். "தமிழ் இளைஞர் பேரவையில்" பல பெண்களும் முனைப்பாக இயங்கினார்கள். இவர்களில் குறிப்பிடத்தக்கவர்களாக ஊர்மிளா, புஷ்பராஜாவின் சகோதரி புஷ்பராணி, கல்யாணி ஆகியோர் இருந்துள்ளனர். புஷ்பராஜா தனது நூலில் முனைப்பாக இயங்கிய இன்னும் பல பெண்களைக் குறிப்பிடுகிறார். இவ்வமைப்பு, அன்று தமிழரின் முதன்மை அரசியல் கட்சியாக இருந்த, தமிழர் விடுதலை கூட்டணியுடன் மிக நெருக்கமாக இருக்கிறது என்று இவ்வமைப்பில் இருந்த பலர், புஷ்பராஜா உட்பட, விசனம் அடைந்தனர். இதனால் இவர்கள் இவ்வமைப்பிலிருந்து விலகி "தமிழீழ விடுதலை இயக்கம்" என்ற அமைப்பை 1975 இல் உருவாக்கினர். இவ்வமைப்பிலும் பல பெண்கள் இயங்கினார்கள் என்பதை புஷ்பராஜாவும், 2012 தனது அனுபவங்களை சிறு நூலாக வெளியிட்ட புஷ்பராணியும் பதிந்துள்ளனர். ஆனால் இவ்வமைப்பில் பெண்கள் வன்முறையில் ஈடுபட்டார்கள் என்று எந்த பதிவும் இல்லை.*

*ஊர்மிளா, சிவகுமாரானுக்கு உதவிய வள்ளி, அற்புதம், புஷ்பராணி, "தமிழீழ விடுதலை இயக்கத்தில்" இயங்கிய இன்னும் பல பெண்கள் தமிழீழ ஆயுதப்போராட்டத்தில் பெண்கள் பங்களிப்பின் முன்னோடிகள் எனலாம். இருந்தும் வள்ளியையும் அற்புதத்தையும் தவிர இவர்கள் எவரும் ஆயுதங்களை கையாளவில்லை. இவ்வமைப்பு, ஆரம்பித்து இரண்டு ஆண்டுகளில், உறுப்பினர்களின் கைதுகளாலும் சிலர் நாட்டை விட்டு வெளியேறியதாலும் கலைந்து போனது.*

*1980களில் பல ஆயுத அமைப்புக்கள் திண்மைபெற்று வளர்ந்தன. இவற்றில் குட்டிமணியின் "தமிழீழ விடுதலை இயக்கம்", விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்து பிளவுபட்டுப்பிரிந்த "தமிழீழ மக்கள் விடுதலைக் கழகம்", "ஈழம் புரட்சிகர மாணவர் இயக்கத்தில்" இருந்து பிரிந்த "ஈழமக்கள் புரட்சிகர விடுதலை முன்னணி" ஆகிய ஐந்து அமைப்புக்களும் முக்கியமானவை. இவ்வைந்து அமைப்புக்களும் 80களில் தமிழர் அரசியலில் அதிகம் தாக்கம் செலுத்தின. இக்காலகட்டத்தில், முக்கியமாக*

*1983ம் ஆண்டு ஜூலை இனவன்முறைக்குப் பின்னர், பெண்களும் இவ்மைப்புகளில் பெரிய அளவில் இணையத் தொடங்கினார்கள். அக்காலகட்டத்தில் பெண்களை இணைப்பதில் விடுதலைப்புலிகளே பின்னின்றார்கள். 1983ம் ஆண்டு வன்முறைக்கும் அப்பால் சிறீலங்கா இராணுவத்தின் பாலியல் வன்செயல்களும் பெண்களை ஆயுத அமைப்புக்களின் பக்கம் ஈர்த்தன.*

*மேலே சுருக்கமாக சொல்லப்பட்ட தமிழர் விடுதலைப் போராட்டம், சமூக சீர்திருத்தங்களுக்கான பல ஊக்கிகளை உருவாக்கித் தந்தது. சாதியமும் பெண்களின் நிலையும் இங்கு முக்கியமான மாற்றங்களை கண்டது. பெண்கள் பொதுவெளியில் வருவதற்கு பல பாதைகளை வகுத்துத் தந்தது. ஒரு முனைப்பான போராட்டமற்ற காலத்தில் இப்பாதைகளில் பயணம் செய்வது பெண்களுக்கு மிகவும் கடினமானது. இவ்வாறு பொதுவெளிக்கு வந்த பெண்களை இரண்டு பெரும் பிரிவுகளாக பார்க்கலாம். இதில் மிகவும் அதிகத் தொகையானோர் வெவ்வேறு ஆயுதக்குழுக்களில் இணைந்தார்கள். இன்னுமொரு பகுதியினர் விடுதலைப்புலிகளின் ஆயுதப்போராட்டத்தில் நம்பிக்கையற்று போருக்கு எதிராக இயங்கினார்கள்.*

*இந்திய இராணுவம் 1987 இல் தமிழீழத்தில் நிலைகொண்டபோது, ஏனைய ஆயதக்குழுக்களை அழித்து அல்லது உள்வாங்கி விடுதலைப்புலிகளின் கை மேலோங்கியிருந்தது. விடுதலைப்புலி பெண்களும் ஏற்கனவே போர்க்களங்களில் நேரடி அனுபவம் பெற்றிருந்தார்கள். இந்திய இராணுவத்துடனான போர்களிலும் இவர்களின் போர்க்களப்பங்கு தொடர்ந்தது. இந்திய இராணுவத்தின் பாலியல் வன்கொடுமைகள் பெண்களை இன்னும் அதிக அளவில் விடுதலைப்புலிகள் பக்கம் ஈர்த்தது. 1990 இல் இந்திய இராணுவம் தழிழீழத்திலிருந்து வெளியேற்றப்பட்ட போது அங்கு உருவாகிய வெற்றிடத்தில் விடுதலைப்புலிகள் ஒரு நடைமுறை அரசை உருவாக்கத் தொடங்கினர். பெண்களுக்கும் தமது சமூகம் சார்ந்த எண்ணங்களை நிறைவேற்ற ஒரு*

சுதந்திரமான வெளி கிடைத்தது. சீதனத்திற்கு எதிரான, சட்டங்களை இயற்றவும், அரங்க செயற்பாடுகளையும் பெண்கள் முன்னின்று நடத்தினார்கள். விடுதலைப்புலிகளின் காவல்துறை உருவாக்கமும் இதில் அதிகம் பெண்கள் இணைந்ததும் உருவாகி வந்த நடைமுறை அரசு பெண்களுக்கான ஒரு அரசு என்ற தோற்றத்தைக் வளர்த்தது. 1996 இல் விடுதலைப்புலிகள் யாழ்பாணத்திலிருந்து சிறீலங்கா இராணுவத்தால் வெளியேற்றப்பட்டனர். வன்னியிலுள்ள கிளிநொச்சியை மையமாகக்கொண்டு, சிறீலங்கா இராணுவத்துடனான கடும் போர்களுக்கு மத்தியில், தமிழீழ நடைமுறை அரசின் வளர்ச்சி தொடர்ந்தது.

இந்நடைமுறை அரசின் கீழ் விடுதலைப்புலி பெண்களும், விடுதலைப்புலிகளின் அமைப்புகளில் வேலை பார்க்கும் பொதுப் பெண்களும், சுயதொழில் செய்யும் பெண்களும் இணைந்தமை வன்னிக்கு வெளியில் இடம்பெறாத ஒரு பெண்கள் வலைப்பின்னலை உருவாக்கியது. இவ்வலைப்பின்னல் ஊடாக இவர்கள் நிராதரவான பெண்களை இனம் கண்டு உதவி பெற்றுக்கொடுக்கக் கூடியவர்களாக இருந்தார்கள். வாழ்வாதாரத் தேவைகளாயினும், குடும்ப வன்முறைப் பிரச்சனைகளாயினும், குழந்தைகளின் கல்வித் தேவைகளாயினும், குடியிருப்புத் தேவைகளாயினும் இவ்வலைப்பின்னலூடாக இனம் காணப்படும் போது அவர்களை உரிய அமைப்புக்கள் பக்கம் வழிகாட்ட இவ்வலைப்பின்னல் பெண்களால் முடிந்தது. இக்கலாச்சாரம் ஏறக்குறைய வன்னிப் பெண்கள் யாவரையும் சென்றடைந்திருந்தது. இதுவே ஒரு தனிப்பட்ட பெண்ணியக் கலாச்சாரமாக, அதாவது பரந்துபட்ட பெண் செயற்பாட்டினால் நிராதரவான பெண்கள் என்று நிலையையே இல்லாமல் செய்யும் கலாச்சாரமாக அங்கு விளங்கியது.

இக்கலாச்சாரத்தை தாங்க, வைத்தியசேவை, வாழ்வாதாரச்சேவை, காவல்துறை, சட்டம், எனப்பல விடுதலைப்புலி அமைப்புக்கள் அங்கு உருவாக்கப்பட்டிருந்தன. அதில் பல அமைப்புக்களில்

ஐம்பது வீதத்திற்கும் மேலாக பெண்கள் பணியாற்றினார்கள். சில அமைப்புக்கள் பெண்கள் மட்டுமே நடத்தும் அமைப்புக்களாக இருந்தன. இதனால் பெண்களும் நிராதரவான பெண்களைக் காணும் போது ஏனைய இடங்களில் முகத்தை திருப்பிக்கொண்டு போவது போல் போகாமல் அவர்களை உரிய அமைப்புகளிடம் வழிகாட்ட முடிந்தது. இப்பரந்துபட்ட பெண்கள் வலைப்பின்னல் வறுமைக்கோட்டில் இருக்கும் பெண்களையும் தன்னுள் சேர்த்துக்கொண்டது. இவர்களும் பெண்கள் பொதுவெளியில் செய்யும் வேலைகளைப் பற்றிய விழிப்புணர்வு கொண்டவர்களாக இருந்தார்கள். இவர்களும் வேலை செய்யும் பெண்களாக ஊக்கப்படுத்தப்பட்டார்கள். அதிகமானோர் பராம்பரியமாக பெண்கள் செய்யும் வேலைகளான சிறுகடை, தையல், விவசாயம் போன்றவற்றிலேயே ஈடுபட்டனர். சிறுபடகில் மீன்பிடித்தல், வாகன ஓட்டுனர், மெக்கானிக் போன்ற வேலைகளிலும் ஓரளவு ஈடுபட்டனர். இவர்களின் தொழில்வளம் சிறிதாக இருந்தாலும் பெருமளவிலான பெண்கள் இவற்றில் ஈடுபட்டிருந்ததால் எதிர்காலத்தில் பெரும் வளர்ச்சிக்கு ஊக்கியாக அமையும் சாத்தியங்கள் அங்கு இருந்தன.

## *புள்ளிவிபரம்*

*விடுதலைப்புலி பெண்கள் பற்றிய புள்ளி விபரங்கள் கீழே தரப்பட்டிருக்கிறது. ஏனைய ஆயுதக் குழுக்களில் இயங்கிய பெண்கள் பற்றிய புள்ளி விபரங்கள் எதுவும் கிடைக்கவில்லை.*

*விடுதலைப்புலி பெண்களின் பங்கு பற்றி இப்புள்ளிவிபரத்திலிருந்து ஓரளவு அனுமானிக்கலாம். அட்டவணை-3 2008 இல் விடுதலைப்புலிகள் வெளியிட்ட மாவீரர் புள்ளிவிபரம். அட்டவணை-2 கரும்புலிகள் புள்ளிவிபரம். அட்டவணை-1 அட்டவணை-3 இல் உள்ள தரவுகளின் பிரதேச ரீதியான திரட்டு. இவ் அட்டவணையில் 1981ம் ஆண்டின் மக்கள்தொகை கணக்கெடுப்பின் பிரதேச ரீதியான ஈழத்தமிழர் புள்ளி விபரமும் சேர்க்கப்பட்டுள்ளது.*

*இத்தரவுகள் பின்வரும் செய்திகளை தருகின்றன.*

1. *விடுதலைப்புலிகள் அமைப்பில் 20-30% பெண்கள் இருந்திருக்கின்றனர். இதுவே மாவீரர் புள்ளி விபரத்திலும் கரும்புலி மாவீரர் புள்ளி விபரத்திலும் பிரதிபலிக்கின்றது.*
2. *ஒட்டுமொத்த ஈழத்தமிழ் பெண்களில் 5-10% பெண்கள் விடுதலைப்புலிகள் அமைப்பில் பங்கு பற்றியிருக்கிறார்கள்.*
3. *மக்கட்தொகை அடிப்படையில் வன்னி பிரதேசமே அதிகமான ஆண்களையும் பெண்களையும் போராட்டத்திற்கு கொடுத்திருக்கிறது. இங்குதான் விடுதலைப்புலிகள் அதிகளவிலான போரில் ஈடுபட்டார்களாதலால் இது எதிர்பார்க்ககூடியதே.*
4. *கிழக்குப் பிரதேசத்தின் ஆண் மாவீரர் தொகை மக்கட்தொகை அடிப்படையில் வன்னிப்பிரதேச ஆண் மாவீரர் தொகைக்கு ஒத்ததாக உள்ளது. கிழக்கில் விடுதலைப்புலிகள் பெரிய அளவில் ஒரு பகுதியை தமது கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்காத போது, இது ஆச்சரியமான பங்களிப்பு.*
5. *கிழக்கில் பெண்களின் பங்கு குறைவாக இருப்பதும் இங்கு விடுதலைப்புலிகள் தமது கட்டுப்பாட்டிற்குள் ஒரு பெரும்*

பகுதியை வைத்திருக்க முடியாமல் போனதே காரணமாக இருக்கலாம்.

6. விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்த ஒவ்வொரு பெண்ணுக்கும், அதாவது 5-10% பெண்களுக்கு, பத்துக்கு மேற்பட்ட அமைப்பிலில்லாத பெண்களைத் தெரிந்திருக்கும். இக்கண்ணோட்டத்தில் பார்க்கும் போது எவ்வளவு ஆழமாக ஈழத்தமிழ் பெண்கள் இவர்களின் செல்வாக்கிற்குள் வந்திருப்பார்கள் என்பதை கற்பனை செய்து பார்க்கமுடிகிறது.

TABLE-1

| | 1981 census | Maaveerar total | I in population who is maaveerer | Male maaveerar | 1 in Male population who is a maaveerar | Female maaveerar | 1 in Female opulation who is a maaveear | % female among maaveerar |
|---|---|---|---|---|---|---|---|---|
| East | 410000 | 6944 | 59 (17%) | 6254 | 33 (30%) | 690 | 297 (3%) | 11 |
| L.Vanni | 302000 | 6503 | 46 (21%) | 4659 | 32 (31%) | 1844 | 81 (12%) | 40 |
| Jaffna | 700000 | 7666 | 91 (11%) | 5615 | 62 (16%) | 2051 | 170 (6%) | 27 |
| Total | 1410000 | 21458 | 65 (15%) | 16808 | 42 (23%) | 4651 | 151 (7%) | 21 |

TABLE-3

| Year | Jaffna | | Batti/Amparai | | Vanni | | Trincomalee | | Mullaitheevu | | Mannar | | Outside | | Total | | All total |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | Male | Female | Male | Female | Male | Female | Male | Female | Male | Female | Male | Female | Male | Female | Male | Female | |
| 1982 | 1 | | | | | | | | | | | | | | 1 | | 1 |
| 1983 | 11 | | | | | | 4 | | | | | | | | 15 | | 15 |
| 1984 | 20 | | 7 | | 3 | | 8 | | 6 | | 6 | | | | 50 | | 50 |
| 1985 | 46 | | 60 | | 14 | | 41 | | 8 | | 14 | | 5 | | 188 | | 188 |
| 1986 | 91 | | 94 | | 20 | | 48 | | 21 | | 36 | | 9 | 1 | 319 | 1 | 320 |
| 1987 | 247 | 5 | 76 | | 46 | 3 | 55 | | 17 | 1 | 48 | 5 | 15 | | 504 | 14 | 518 |
| 1988 | 127 | 7 | 114 | 1 | 39 | 1 | 39 | | 18 | 1 | 18 | 1 | 16 | | 371 | 11 | 382 |
| 1989 | 147 | 2 | 86 | | 56 | | 47 | | 37 | | 27 | | 18 | | 418 | 2 | 420 |
| 1990 | 277 | 41 | 181 | 4 | 140 | 11 | 124 | 2 | 74 | 11 | 64 | 1 | 33 | 2 | 893 | 72 | 965 |
| 1991 | 511 | 104 | 312 | 19 | 180 | 33 | 173 | 18 | 114 | 19 | 101 | 15 | 22 | 1 | 1413 | 209 | 1622 |
| 1992 | 224 | 45 | 243 | 9 | 83 | 6 | 67 | 1 | 40 | 7 | 48 | 6 | 13 | | 718 | 74 | 792 |
| 1993 | 215 | 49 | 280 | 18 | 110 | 28 | 78 | 6 | 55 | 11 | 61 | 12 | 5 | | 804 | 124 | 928 |
| 1994 | 90 | 11 | 162 | | 30 | | 42 | | 18 | 1 | 22 | | 2 | | 366 | 12 | 378 |
| 1995 | 420 | 177 | 433 | 15 | 150 | 43 | 83 | 6 | 60 | 25 | 64 | 19 | 10 | 3 | 1220 | 288 | 1508 |
| 1996 | 448 | 142 | 320 | 33 | 129 | 53 | 85 | 13 | 54 | 26 | 55 | 14 | 4 | 4 | 1095 | 285 | 1380 |
| 1997 | 522 | 227 | 643 | 65 | 168 | 92 | 120 | 19 | 91 | 52 | 46 | 44 | 15 | 8 | 1605 | 507 | 2112 |
| 1998 | 364 | 270 | 429 | 94 | 134 | 141 | 102 | 36 | 58 | 69 | 54 | 22 | 17 | 16 | 1158 | 648 | 1806 |
| 1999 | 362 | 203 | 323 | 71 | 144 | 118 | 80 | 19 | 86 | 57 | 51 | 23 | 7 | 5 | 1053 | 496 | 1549 |
| 2000 | 475 | 318 | 228 | 79 | 234 | 179 | 100 | 27 | 106 | 78 | 62 | 45 | 35 | 17 | 1240 | 743 | 1983 |
| 2001 | 171 | 117 | 122 | 28 | 74 | 58 | 45 | 12 | 41 | 27 | 31 | 22 | 8 | 6 | 492 | 270 | 762 |
| 2002 | 11 | 5 | 5 | 5 | 6 | 1 | 6 | | 2 | 3 | | 1 | | 1 | 30 | 16 | 46 |
| 2003 | 31 | 5 | 10 | 1 | 6 | 2 | 6 | 1 | 4 | 1 | 3 | 1 | 1 | | 61 | 11 | 72 |
| 2004 | 9 | 4 | 41 | 10 | 5 | 1 | 5 | | 3 | 2 | 0 | 0 | 0 | 0 | 63 | 17 | 80 |
| 2005 | 9 | 4 | 20 | 10 | | | 11 | | 1 | 1 | 1 | | | | 42 | 15 | 57 |
| 2006 | 170 | 111 | 178 | 13 | 130 | 81 | 174 | 24 | 40 | 19 | 35 | 9 | 20 | 2 | 747 | 259 | 1006 |
| 2007 | 332 | 62 | 170 | 10 | 248 | 42 | 69 | 5 | 147 | 28 | 52 | 12 | 19 | | 1037 | 159 | 1196 |
| 2008 | 284 | 142 | 49 | 5 | 278 | 151 | 56 | 11 | 181 | 80 | 51 | 29 | 6 | | 905 | 418 | 1323 |
| Total | 5615 | 2051 | 4586 | 490 | 2427 | 1044 | 1668 | 200 | 1282 | 519 | 950 | 281 | 280 | 66 | 16808 | 4651 | 21459 |
| All Total | 7666 | | 5076 | | 3471 | | 1868 | | 1801 | | 1231 | | 346 | | 21459 | | |
| | Jaffna | | Batti/Amparai | | Vanni | | Trincomalee | | Mullaitheevu | | Mannar | | Outside | | Total | | |

## *ஆயுதப்போராட்ட தமிழ்பெண்கள் எழுதிய நூல் பட்டியல்*

*ஆயுதப்போராட்டத்தில் இணைந்திருந்த ஈழத்தமிழ்ப் பெண்கள் எழுதிய ஆக்கங்களை உள்ளடக்கிய வெளியீடுகள் இங்கு பட்டியலிடப்பட்டிருக்கின்றன. அவர்களுடன் வாழ்ந்து நெருக்கமாக வேலை செய்த ஈழத்தமிழ் பெண்களின் ஆக்கங்களும் இங்கு சேர்க்கப்பட்டிருக்கின்றன . கீழே எட்டு பிரிவுகளில் இவை பட்டியலிடப்படுகின்றன. இது முழுமையான பட்டியலல்ல. இவற்றில் அதிகமானவை படிப்பகம் மற்றும் நூலகம் ஆகிய இரண்டு ஆவணக்காப்பகங்களில் கிடைக்கின்றன.*

### *1. விடுதலைப்புலி பெண்களின் எழுத்துக்கள்*

*விடுதலைப்புலி பெண்களின் எழுத்துக்களை உள்ளடக்கிய விடுதலைப் புலிகளின் வெளியீடுகளும் விடுதலைப்புலி மகளிர் அமைப்பின் வெளியீடுகளும் ஏராளம். இவற்றில் சில:*

*1.1 "சுதந்திரப்பறவைகள்", வெளியீட்டுப்பிரிவு-விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு. இது விடுதலைப்புலி பெண்களின் அதிகாரபூர்வ ஏடாகக் கருதப்படுவது. தொடர்ச்சியான வெளியீடு. தற்பொழுது கிடைப்பதற்கில்லை.*

*1.2 "நாற்று", பெண்கள் ஆய்வு மையம், விடுதலைப்புலி மகளிர் அமைப்பு. தொடர்ச்சியான வெளியீடு. தற்பொழுது கிடைப்பதற்கில்லை.*

*1.3 "வெளிச்சம்", விடுதலைப்புலிகள் கலை பண்பாட்டுப் பிரிவு. தொடர்ச்சியான வெளியீடு.*

*1.4 "எரிமலை", விடுதலைப்புலிகள் அனைத்துலகப் பிரிவு. தொடர்ச்சியான வெளியீடு.*

*1.5 "வானதியின் கவிதைகள்" கவிதைத் தொகுப்பு, வானதி, வெளியீட்டுப் பிரிவு-விடுதலைப்புலிகள், 1992.*

*1.6 "கஸ்தூரியின் ஆக்கங்கள்", கஸ்தூரி, வெளியீட்டுப்பிரிவு-விடுதலைப்புலிகள், 1995.*

*1.7 "காதோடு சொல்லிவிடு", பாரதி, வெளியீட்டுப்பிரிவு-விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு, 1995.*

*1.8 “எழுதாத உன் கவிதை” கவிதைத் தொகுப்பு, கப்டன் வானதி வெளியீட்டகம், விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு, 2001.*

*1.9 “விழுதாகி வேருமாகி” 2ம் லெப். மாலதி படையணி வரலாறு, ஆசிரியர்கள்: அ.காந்தா- செ.புரட்சிகா-மலைமகள், 2ம் லெப். மாலதி படையணி வெளியீடு.*

*1.10 “மலைமகள் கதைகள்” சிறுகதைத் தொகுப்பு, மலைமகள், கப்டன் வானதி வெளியீட்டகம், விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு, 2004.*

*1.11 “மீண்டும் துளிர்க்கும் வசந்தம்” கவிதைத் தொகுப்பு, அம்புலி, வெளியீட்டுப்பிரிவு- விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு, 2004.*

*1.12 “வழி” சிறுகதைத் தொகுப்பு, கப்டன் வானதி வெளியீட்டகம்-விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு, 2005.*

*1.13 “பெயரிடாத நட்சத்திரங்கள்” பெண் போராளிகளின் கவிதைத் தொகுப்பு, ஊடறு-விடியல் பதிப்பகம் வெளியீடு, 2011. ஊடறு புலம்பெயர் பெண்கள் மத்தியில் இயங்கும் பெண்கள் அமைப்பு.*

*1.14 “போராளியின் காதலி” சிறுநாவல், வெற்றிச்செல்வி, சோழன் படைப்பகம், தமிழ்நாடு, 2012.*

## *2. அடேல் பாலசிங்கத்தின் எழுத்து*

*அடேல் பாலசிங்கம் தமிழரல்ல. இதனால் இவர் இத்தொகுப்பில் அடங்குபவர் அல்ல. இருந்தும் இன்றுவரை விடுதலைப்புலி பெண்களை நெருக்கமாக அறிந்து அவர்களைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதப்பட்ட ஓரே ஒரு நூலாக அவர் நூல் விளங்குகிறது. இருந்தும், இந்நூல் விடுதலைப்புலி பெண்களின் ஆயுதமேந்திய பணிகளைப்பற்றியே பேசுகிறது.*

2.1 “Women Fighters of Liberation Tigers”, Adele Balasingham, Liberation Tigers of Tamil Eelam, 1993.

### *3. ஏனைய ஆயுதக்குழுக்களில் இயங்கிய பெண்களின் எழுத்துக்கள்*

*ஏனைய ஆயுதக்குழுக்களில் இயங்கிய பெண்களின் எழுத்துக்கள் எதுவும் இதுவரை கிடைக்கப்பெறவில்லை.*

### *4. பெண்கள் ஆய்வு வட்டம் - யாழ் பல்கலைக்கழகத்தை மையமாக் கொண்டது*

*4.1 "சொல்லாத செய்திகள்" கவிதைத் தொகுப்பு, போருக்கு எதிராக இயங்கிய பெண்களின் கவிதைகள், 1986.*

*4.2 ரஜனி தினரகம பெண்கள் ஆய்வு வட்டத்தின் முதன்மையான ஒரு உறுப்பினர். இவர் மூன்று ஆண் எழுத்தாளர்களுடன் இணைந்து 'உடைந்த பனைமரம்' என்னும் நூலை எழுதியுள்ளார். ஆனால் இந்நூலில் இவரின் ஆக்கம் எதுவென்று சுட்டப்படவில்லை.*

*4.3 'பெண்கள் ஆய்வு வட்டம்', 1980களில் ரஜனி தினரகமவின் கொலையின் பின்னர் இவ்வமைப்பு ஸ்தம்பிதம் அடையும் முன்னர், கொழும்பிலும் மட்டக்களப்பிலும் இயங்கும் பெண்கள் அமைப்பான 'சூரியா பெண்கள் அபிவிருத்தி மையத்துடன்' இணைந்து வேலை செய்தது. சூரியா பெண்கள் அபிவிருத்தி மையம் 'பெண்' என்ற சஞ்சிகையை இன்றும் தொடர்ச்சியாக வெளியிட்டு வருகிறது.*

### *5. 2009 இனவழிப்பு அனுபவங்கள்*

***5.1*** *"ஈழப்போரின் இறுதி நாட்கள்", வெற்றிச்செல்வி, சோழன் படைப்பகம், தமிழ்நாடு, 2012.*

5.2 "A fleeting moment in my country", N Malathy, Aakar Books, New Delhi, 2012

*5.3 "எனது நாட்டில் ஒரு துளி நேரம்", ந மாலதி, விடியல் பதிப்பகம், தமிழ்நாடு, 2013. மேலே குறிப்பிட்ட நூலின் தமிழ் வடிவம்.*

*5.4 "ஊழிக்காலம்" நாவல், தமிழ்க்கவி, தமிழினி பதிப்பகம், தமிழ்நாடு, 2013.*

## *6. 2009க்குப் பின்னர் வெளியிடப்பட்ட முந்தையகால அனுபவங்கள்*

*6.1* "Tamil Tigress", Niromi de Souyza, Allen & Unwin, Australia, 2011. *ஒரு வருடத்திற்கும் குறைவான (1987-88) காலத்தில் ஆசிரியர் விடுதலைப்புலிகள் அமைப்பிலிருந்த அனுபவங்களின் பதிவு. இது அனுபவப் பதிவு என்று கூறப்பட்டாலும் இங்கு பல புனைவுகள் உள்ளதாக சந்தேகிக்கப்படுகிறது.*

*6.2 "அகாலம்", புஷ்பராணி, கருப்புப் பிரதிகள், தமிழ்நாடு, 2013. 1970களின் அனுபவப்பதிவு.*

## *7. 2009க்குப் பின்னரான விடுதலைப்புலி பெண்களின் அனுபவங்கள்*

*7.1 "காணாமல் போனவனின் மனைவி" சிறுகதைத் தொகுப்பு, வெற்றிச்செல்வி, சோழன் படைப்பகம், 2012, தமிழ்நாடு.*

*7.2 "உம்மத்" நாவல், சர்மிளா செய்யத், காலச்சுவடு பதிப்பகம், தமிழ்நாடு, 2013. ஆசிரியரின் விடுதலைப்புலி பெண்களுடனான அனுபவங்கள் முழுவதும் 2009க்குப் பின்னரானது. ஆயுதம் தாங்கிய பெண்களுடன் இவருக்கு கிடைத்ததாக அனுபவங்கள் எதையும் இவர் இங்கு குறிப்பிடவில்லை. இத்தகைய பல நூல்கள் இன்று இந்திய நாட்டவர்களாலும் எழுதப்பட்டு வருகின்றன.*





எனது
பேனா கூரானது
எனது
கைகளில் உள்ள
துப்பாக்கியைப் போல

ஆனால்
துப்பாக்கி
சன்னத்தை மட்டுமே துப்பும்
என் பேனாவோ
சகலதையுமே கக்கும்!



